# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



ஐ பக்கங்கள் ஆரம்பம்

KALKI • 22.08.2010 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



ஆள் பிடிக்கும் அழகிரி!

"நான் ஆக்ஷன் சிறுத்தை!"

- கார்த்தி பளீர் பேட்டி




ஸ்பெஷல்

# கல்கி

**22.08.2010**

## ஆன்மிகம்



## அரசியல்



## சிறுகதைகள்



## அமரர் கல்கி பக்கம்






## தொடர்கள்



## 108 ஸ்பெஷல்



## வாசகர் பக்கங்கள்



## சமூகம்



ஞாநி ஓ பக்கங்கள் 28

## சினிமா

''மீண்டும் தமிழகத்தில் தி.மு.க. ஆட்சிக்கு வந்தால் 'தாங்காது தமிழ்நாடு.' எமர்ஜென்ஸி காலத்தில் காங்கிரஸைத் தோற்கடிக்க எல்லா கட்சிகளும் கரம்கோத்ததுபோல் இப்போது தி.மு.க. ஆட்சியை வீழ்த்த எதிர்க்கட்சிகள் ஒருங்கிணைந்தால் பா.ஜ.க. முழு ஒத்துழைப்பு கொடுக்கும்'' என்கிறார் தமிழக பா.ஜ.க. தலைவர் பொன். ராதாகிருஷ்ணன்.

ஏன்?

''எல்லா முனைகளிலும் கருணாநிதி அரசு தோற்றுப் போய்விட்டது. மக்கள் நன்றாகவே ஏமாற்றப்பட்டு விட்டார்கள். விலைவாசி ஏற்றம் ஒருபுறம்; விவசாயிகள் கண்ணீர் மறுபுறம். காவிரி, பாலாறு, முல்லைப் பெரியாறு... என்று தமிழக நீர்வள ஆதாரங்களைக் குடும்ப நலனுக்காகத் தியாகம் செய்து விட்டார் கருணாநிதி. தமிழ்ச் சமுதாயத்தைக் குடி வெறியில் ஆழ்த்தி, அழித்தொழிக்கும்போது, செம்மொழி மாநாடாம்! ஒரு 'குடி' மகன் ஒரு வருடம் 20,000 ரூபாய்க்கு டாஸ்மாக் சரக்குக் குடிக்கிறான் என்று ஒரு புள்ளிவிவரம் கூறுகிறது. வலது கையில் அவனிடமிருந்து வருமானத்தைப் பெற்றுக் கொள்ளும் கருணாநிதி, இலவசம் என்ற பெயரில் ஐந்தாயிரம் ரூபாய்க்குள் தொலைக்காட்சிப் பெட்டியும் காஸ் அடுப்பும் கொடுக்கிறார். தமிழர்களை முன்னேற்ற டார்கெட் வைத்துத் திட்டங்களைத் தீட்டுவதற்குப் பதிலாக 'டாஸ்மாக்' வருமானத்தை உயர்த்த டார்கெட் வைத்து தமிழகத்தைக் குடிகார மாநிலமாக மாற்றிச் சீரழித்து விட்டார். இந்த முறையும் பண பலத்தைக் கொண்டு தேர்தலில் ஜெயிக்கலாம் என்று தி.மு.க. கருதுகிறது. ஆனால், அது நடக்காது.''

தி.மு.க.-அ.தி.மு.க. அணியில் இணைந்து

# தாங்காது தமிழகம்!



# கண் சிவக்கும் பொன்.ராதாகிருஷ்ணன்

**கொள்ள பல கட்சிகள் ஆர்வம் காட்டுகின்றனவே? பா.ஜ.க. சிந்தப்படுவதில்லையே?**

"நீங்கள் சொல்வது தவறு. யாரையும் கெஞ்சிக் கூட்டணியில் சேரும் அவசியம் எங்களுக்கு இல்லை. தி.மு.க.வே விரும்பி வந்தால்கூட நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோம். தனித்தே நின்று எங்கள் வேட்பாளர்களை வெற்றியடைய வைக்கும் செல்வாக்கு எங்களுக்கு இருக்கிறது."

**நீதிபதிகள் ரங்கனாத் மிஸ்ரா, ராஜேந்திர சச்சார் ஆகியோர் முஸ்லிம் மாணவர்களுக்குக் கல்வி உதவித் தொகை கொடுக்க சிபாரிசு செய்துள்ளனர். கல்வியில் அம்மாணவர்கள் பிற்பட்ட நிலையில் இருப்பதைச் சுட்டிக் காட்டியுள்ளனர். அப்படியிருக்க இதை மத ரீதியாக பா.ஜ.க. பயன்படுத்துவது சரியா?**

"காமராஜர் இலவசக் கல்வியை எல்லோருக்கும்தான் கொண்டு வந்தார். ஏழை, பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன், முற்பட்டவன், பிற்பட்டவன் என்று பிரித்துப் பார்த்தாரா...? இந்து மதத்தில் லட்சக்கணக்கான ஏழைகள் இருக்கிறார்கள். அவர்களும் பொருளாதார கஷ்டம் காரணமாகத் தங்கள் குழந்தைகளைப் படிக்க வைக்க முடியாமல் இருக்கிறார்கள். முஸ்லிம்களுக்குக் கொடுக்கக் கூடாது என்று சொல்லவில்லை. இந்து மதத்தில் உள்ள ஏழைகளுக்கும் கொடுங்கள் என்றுதான் கேட்கிறோம்."

**இந்து மதத்தில் பெரும்பான்மையாக உள்ள தாழ்த்தப்பட்டவர்கள், மலைவாழ் மக்கள், பிற்படுத்தப்பட்ட, மிகப் பிற்படுத்தப்பட்ட மாணவ, மாணவிகளுக்கு அதற்குரிய துறைகள் மூலம் உதவித் தொகை ஏற்கெனவே வழங்கப்பட்டு வருகிறதே?**

"அவர்களுக்குக் கொடுக்கப்படும் கல்வி உதவித் தொகை முஸ்லிம்களுக்குக் கொடுக்குமளவுக்கு உயர்த்திக் கொடுக்க வேண்டும். தவிர, பொதுப் பிரிவில் இருக்கும் ஏழைகளுக்கும் கொடுக்க வேண்டும்."

**- ப்ரியன்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

பொறுப்பாசிரியர் : ஆர்.வெங்கடேஷ்

உதவி ஆசிரியர்கள் : கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு : எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888

தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு : 044 - 4343 8822

kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு : 044 - 4343 8811

marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு : 044 - 4343 8833

subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு : 044 - 4343 8844

sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி : www.kalkionline.com





சந்தா விவரம் (ஒரு வருடம்):

உள்நாடு : ரூ.500/-

வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32



● உயராத பங்கு!

● சரா.ஏ.முரளி, கள்ளக்குறிச்சி

*? தமிழகம் முழுவதும் கூட்டுறவு மருந்துக்கடைகள் திறக்கப்படும் என கூட்டுறவுத் துறை அமைச்சர் கோ.சி.மணி அறிவித்துள்ளாரே?*

! கூட்டுறவு சங்கங்களுக்கு இன்று ஏற்பட்டுள்ள அபகீர்த்தி, மக்களிடையே அவை குறித்து நிலவும் அவநம்பிக்கை ஆகியவற்றை வைத்துப் பார்க்கும்போது, 'கூட்டுறவு முறையில் மருந்துக்குக்கூட ஒரு மருந்துக் கடை திறக்க வேண்டாம்!' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது!



● உதவும் கருத்து

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

*? இந்தியத் தகவல் தொழில்நுட்பத் துறையில் தமிழ்நாட்டின் பங்கு 25 சதவிகிதமாக உயரும் என்று ஸ்டாலின் சொல்கிறாரே?*

! அது இருக்கட்டும் ஸார். குறுவை சாகுபடி இரண்டு ஆண்டுகளாக இல்லை. கைத்தறி, நெசவு, வேறு பல சிறு, குறுந்தொழில்கள் நசிந்துகொண்டு இருக்கின்றன. அதி லெல்லாம் தமிழ்நாடு முன்னேற வேண்டாமா?



● 'குழப்பக்காட்டு'!

● கு. கணேசன், பனங்கோட்டூர்

*? ''தேர்தலில் வோட்டளிக்கவில்லை என்று சொல்வது ஃபேஷனாகிவிட்டது. இந்த நிலை மாறி, வோட்டளிக்காததற்காக வருத்தப்படும் நிலை ஏற்பட வேண்டும்'' என்கிறாரே புதிய தேர்தல் கமிஷ்னர் குரேஷி?*

! இது ஃபேஷன் சம்பந்தப்பட்டது அல்ல. அரசியல்வாதிகளின் தகுதி சம்பந்தப்பட்டது. மக்கள், வாக்களிக்காமல் தங்கள் எதிர்ப்பை மௌனமாகப் பதிவு செய்கிறார்கள். மாறவேண்டியது தேர்தல் விதிமுறைகள் மட்டுமல்ல; அரசியல்வாதிகளும்தான்.

● எஸ்.ஜெயகாந்தன், புன்செய்புளியம்பட்டி

*? மரண தண்டனையை ரத்து செய்யக்கூடாது என தேசிய மனித உரிமை ஆணையத் தலைவர் கே.ஜி.பாலகிருஷ்ணன் சொல்கிறாரே!*



● விதியோடு மதியும்...

! வரவேற்கவேண்டிய கருத்து. பணி ஓய்வுபெற்ற உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி கூறுவதால் வலிமையும் அதிகம். மரண தண்டனைகள் இங்கு அபூர்வமே. ஆனால், மேல் முறையீடுகள் அனேகமாக அனைத்திலும் உண்டு. அதற்கும் மேலாக, நிலுவையில் உள்ள கருணை மனுக்கள் வேறு! இவற்றின் மீது விரைவில் முடிவெடுக்க, கே.ஜி.பி.யின் கருத்து உதவட்டும்.

● அ.சுகுமார், காட்பாடி

*? எந்திரன் படப் பாடல்கள் எப்படி?*

! பாடல்கள் சராசரி தரம். அதற்கு பப்ளிஸிடி படா தந்திரம்!

● *வி.ஆனந்தகிருஷ்ணன்,*
*சென்னை - 101*

*? தி.மு.க.வை வீழ்த்த முடியாது என்றும் தி.மு.க. கொடிதான் தமது சொத்து என்றும் கருணாநிதி கூறியுள்ளாரே?*

! வயது காலத்தில் சொத்துக்களை விற்றுவிட்டும் அல்லது பிறருக்கு எழுதி வைத்துவிட்டும் 'தி.மு.க. கொடிதான் என் சொத்து' என்று கூறுவதில் பெருமை இல்லை. மைனாரிட்டி ஆட்சி நடத்திக்கொண்டு 'தி.மு.க.வை யாரும் வீழ்த்த முடியாது' என்று கூறுவதில் அர்த்தமும் இல்லை.

● ப.தர்சனி, குடந்தை

*? மத்திய அரசு எங்கள் மாநிலத்தை எதிரி நாடாகக் கருதுகிறது என்கிறாரே நரேந்திர மோடி....?*

! அப்படி கருதி செயலாற்றினால் நாளை குஜராத்தில் காங்கிரஸ் எவ்வாறு செல்வாக்குப் பெற முடியும்? அது முகத்தின் மீது கோபித்துக்கொண்டு மூக்கை அறுத்துக்கொண்ட கதையாகத்தான் இருக்கும்! மோடி, கட்சியையும் ஆட்சியையும் குழப்பி மக்களைக் கவர முயற்சி செய்கிறார். தவறான, ஆபத்தான அணுகுமுறை.

## நீங்கள் கேட்டவை - தராசு

# எந்திரன் பாடல்கள் எப்படி?



★ மருத்துவரும் வேண்டாம்!



★ கில்டி காங்கிரஸ்!

● **எஸ்.கோபாலன், நங்கநல்லூர்** ★

***?** விலைவாசி உயர்ந்துவிட்டது என்று கூக்குரல் இட்டுக்கொண்டேயிருந்தாலும், புடைவை, நகை கடைகளில் இன்னும் கூட்டம் குறையாமலே இருக்கிறதே?*

! பெரும்பாலும், புழக்கத்தில் உள்ள பல்லாயிரம் கோடி கறுப்புப் பணம்தான் அங்கே பரிவர்த்தனை ஆகிறது.

● **எஸ்.ராமசாமி,**

**வடக்கு தயிர்பாளையம்**

***?** 'விலைவாசி உயர்வை அரசியல் ஆக்கக்கூடாது' என எதிர்க்கட்சியினருக்கு ஜெயந்தி நடராஜன் வேண்டுகோள் விடுத்துள்ளது சரியா?*

! காலத்துக்கு ஏற்ப 'கில்டி' காங்கிரஸ் அடிக்கும் பல்டிதான் இது! பி.ஜே.பி. ஆட்சியில் இருந்தபோது வெங்காயம் விலை உயர்ந்ததைக் குறித்து விலை வாரியாகப் பேசி, அரசியல் பண்ணியவர்கள்தான் இன்று அனைத்துப் பொருட்களின் விலைவாசி உயர்வைக் கண்டித்து அரசியல் பண்ணக்கூடாது என்கிறார்கள்.

● **ஜி.கே.எஸ்.மூர்த்தி,**

**கோபிசெட்டிப்பாளையம்**

***?** 'காங்கிரஸ் - தி.மு.க. கூட்டணியின் வலிமைக்குக் கவசமாகவும் வலிக்கு நிவாரணமாகவும் இருப்போம்' என்கிறாரே தங்கபாலு?*

! அது தங்கபாலு கருத்து. 'வலி நிவாரணி, வலிக்குமிடத்தில் உடல் மீது பூசப்பட வேண்டும்; கவசத்தின் மீது பூசினால் வலி தீராது' என்பது இளங்கோவன் கூற்று!

● **ஜி.ஆர்.ராகவன், காகிதபுரம்** ❐

***?** இலங்கைத் தமிழர்கள் முகாம்களிலிருந்து விடுபட்டுச் சுதந்திர வாழ்க்கை வாழ நிரந்தரமான தீர்வு என்ன?*

! 1) இலங்கை அரசு அவர்களுடைய உரிமைகளை மதித்து இயங்க வேண்டும் 2) இதனை உறுதிப்படுத்தும் வகையில் இந்திய அரசு அயலுறவு கொள்கை வகுத்து, சர்வதேச ஆதரவுடன் முயற்சி மேற்கொள்ள வேண்டும் 3) இலங்கைத் தமிழர்கள், தேர்தல்களில் வோட்டுப் போட மறுக்காமல், தங்கள் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்ள வேண்டும்.

| ❐ ரூ.150 பரிசு பெறுபவர் : | ★ ரூ. 75 பரிசு பெறுபவர் : |
| --- | --- |
| **ஜி.ஆர்.ராகவன், காகிதபுரம்** | **எஸ்.கோபாலன், நங்கநல்லூர்** |

# ஆல்ஃபா மைண்ட் பவர்

## ஆழ்மனதின் சக்தி!



**ALPHA™ MIND POWER**

"Unwind Your Mind & Empower Yourself"

மனோ சக்தி நிபுணர் **டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்**

அளிக்கும் ஒரு நாள் இந்தியாவின் பழம்பெரும் சித்தர்களின் சக்தியுடன் கூடிய ஒரு நாள் ஆல்ஃபா தியானப் பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பண வரவை அதிகரிக்க
- உறவுகளை சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலவச் செய்ய
- நோய் தீர்க்க, நிம்மதியாகத் தூங்க
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

**தபால் மூலம் கற்கலாம்**

ஆல்ஃபா மைண்ட் பவர் ஆடியோ சிடி மற்றும் பயிற்சிப் புத்தகம் ஆங்கிலம் மற்றும் தமிழில் தபால் மூலம் பெறலாம்.

ஒரு நாள் பயிற்சி மட்டுமே!

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு கடிதம்**

பல வருடங்களாக நான் மன உளைச்சலுடன் இருந்தேன். குழந்தைகளை அடித்து துன்புறுத்தினேன். என் கணவரிடமும் மற்றும் உறவினர்களிடமும் எரிந்து விழுந்தேன். இதனால் எல்லோரும் என்னை வெறுத்தனர். பின்னர் ஆல்ஃபா தியானம் பயிற்சியில் கலந்துகொண்டேன். அத்துடன் குருஜியிடம் நேரடியாக 'மியூசிக் தெரபி' பெற்றுக்கொண்டேன். இதன் பிறகு என் மனநிலை மாறி விட்டது. எல்லோரிடமும் அன்பாக பழகுகிறேன். ஆல்ஃபாவிற்கு நன்றி! குருஜிக்கு நன்றி!

திருமதி சுமதி,
சென்னை

அடுத்து வரும் பயிற்சி வகுப்புகள்

**டெல்லி - 05.09.10**

**சென்னை - 19.09.10**

ஆர்.எஸ்.ஆர்.பிளாசா, 3வது தளம், 50, 51 ஆற்காடு ரோடு, சாலிகிராமம், சென்னை - 600 093. இந்தியா ஃபோன்:+91-44-23760007; மொபைல் : 98416 95664 / 98414 02000 / 98412 72146
e-mail : amp@alphamindpower.net www.alphamindpower.net

---



ஸ்ரீ சுவாமி நாத சுவாமி சஹாயம்

ௐ

**இந்தியாவின் சிறப்புமிக்க முன்னணி ஸ்தாபனம்**




# Sri Gomathi Sankar Catering Service

# ஸ்ரீ கோமதி சங்கர் கேட்டரிங் சர்வீஸ்

## Master Cook Catering Contractors



சமையல் சக்கரவர்த்தி

மாம்பலம் **G. சங்கர் ஐயர்**

**பாரதம் முழுவதும்**

15/6, Nayakkamar Street, Near Postal Colony, West Mambalam, Chennai - 600 033.

**Ph: 2371 2318 Cell: 98411 13559, 93810 53924, 2483 2334 (R)**

மலையுச்சிக் கிராமங்களுக்கும் 108 ஆம்புலன்ஸ் வருகிறதா? களத்தில் இறங்கினோம். திருச்சி மாவட்டத்தில் துறையூர் பகுதியின் பச்சை மலை, இரு பிரிவாகப் பிளந்து கிடக்கிறது. மலை முழுவதும் பெயருக்கேற்ற பசுமை.

டாப் செங்காட்டுப்பட்டி, கோம்பை, வண்ணாடு... என மொத்தம் மூன்று பஞ்சாயத்துகள். மலை மீது மொத்தம் ஐம்பதுக்கும் மேற்பட்ட கிராமங்கள். அத்தனை கிராமங்களுக்கும் வந்து போகிறது 108 ஆம்புலன்ஸ் சேவை.

துறையூரிலிருந்து முப்பது கி.மீ. தூரத்தில் மலையடிவாரம். ''எங்க பகுதிக்கு 108 ஆம்புலன்ஸ் பயன்பாட்டுக்கு வந்து ரெண்டு வருஷம் ஆகுது. இதுக்கு முன்னாடி மலை கிராமங்கள்ல இருக்கறவங்களுக்கு ஏதேனும் உயிருக்கு ஆபத்து, பிரசவ கேஸ்னா இங்கேருந்து துறையூருக்கு ஃபோன் போட்டு, அங்கேருந்து வாடகைக் கார் தான் வந்து, அப்புறம்தான் ஆஸ்பத்திரிக்குப் போயாகணும். வாடகையே ரெண்டாயிரம் ரூபாய்க்கு மேல் ஆகும். இப்ப 108 வந்ததுலேர்ந்து, மலை கிராமங்கள்ல யாருமே வாடகைக் கார் கூப்பிடுறது கிடையாது'' என்கிறார் மலை கிராமவாசி ஒருவர்.



# தீப்பந்தத்துக்கு உதவிய சூழல் விளக்கு!


* லலிதா


* பிரகாஷ்


* ராஜாத்தி

''கீழசெங்காட்டுப்பட்டி அரசு ஆரம்ப சுகாதார நிலையத்துலதான் வைத்தியம் பார்த்துட்டு இருந்தேன். இதுக்கு முன்னாடி எனக்கு ரெண்டு புள்ளைங்க, துறையூர் கவர்மென்ட் ஆஸ்பத்திரியிலதான் பொறந்திச்சு. இப்ப எனக்கு இது மூணாவது குழந்தை. குழந்தை பிறக்க இன்னும் பத்து நாள் இருக்குன்னு அசால்ட்டா இருந்துட்டோம். ஒருநாள் திடீர்னு வயித்து வலி. இந்த மலைப் பகுதியில ஒரு பிரச்னை. எல்லா இடங்கள்லயும் செல் டவர் கிடைக்காது. இங்கேர்ந்து ஒரு கி.மீ. தூரம் தள்ளிப் போய் உசரமான எடத்துலேர்ந்து 108க்கு

# உயிர் காக்கும் 108







ஃபோன் போட்டாங்க. ஃபோன் பண்ண ஒரு மணி நேரத்துல துறையூர்லேர்ந்து எங்க ஊருக்கு ஆம்புலன்ஸ் வந்துடுச்சு. அதுல ஏறிப் போனோம். போற வழியில பெண் குழந்தை ஆம்புலன்சிலயே பொறந்துடிச்சு!'' என்கிறார் மணலோடை கிராமத்தின் லலிதா.

''ஒரு நாள் இரவு மோர் சோறும் மாம்பழமும் தின்னுட்டுப் படுத்தேன். விடியற்காலைலேர்ந்து வாந்தி பேதி! நிக்கவே இல்லை. மலைக்கு வர்ற காலம்பற பஸ்சும் வந்துட்டுப் போய்டுச்சு. என்னால பஸ்சுல உக்கார்ந்து போகவும் முடியாது. பக்கத்து வூட்டு ஆளுங்க 108க்குப் ஃபோன் போட்டு ஆம்புலன்ஸ் வரவழைச்சாங்க. துறையூர் தர்மாஸ்பத்திரியில சேர்த்தாங்க. அங்க பத்து நாள் இருந்தேன். இப்ப நல்லபடியா நடமாடிட்டு இருக்கேன்!'' எனச் சொல்கிறார் வண்ணாடு கிராமத்தின் ராஜாத்தி.

''இரவு ஒரு மணி இருக்கும். டாப் செங்காட்டுப் பட்டி ஓடைக்காட்டுபுதூர் கிராமத்துக்குப் போகச் சொல்லி சென்னையிலேர்ந்து எங்களுக்கு உத்தரவு. ஆம்புலன்ஸ் எடுத்துட்டுக் கிளம்பினோம். நைட்டு நேரம். மலை கிராமங்கள்ல நாலஞ்சு வீடு, அஞ்சாறு வீடுன்னு தள்ளித் தள்ளி இருக்கும். இதுல எங்கப் போய்த் தேடுறது. ஒருவழியா நைட்டு ரெண்டு மணிக்குப் போய்ச் சேர்ந்துட்டோம். சுத்திலும் இருட்டு. எந்தப் பக்கத்துல அந்த வீடுன்னு தெரியலை. தூரத்துல தீப்பந்தம் காட்டிட்டு இருந்தாங்க. சரி, அவுங்களாத்தான் இருக்கும்னு, அந்தத் தீப்பந்த ஒளி வர்ற இடத்தை நோக்கிப் போனோம். அவுங்களும் ஆம்புலன்ஸ் சுழல் விளக்கு வெளிச்சம் பார்த்து நகர்ந்து வந்தாங்க. ரோட்ல ஆம்புலன்ஸ்ஸை நிப்பாட்டிட்டு பதினைஞ்சு நிமிஷம் நடந்து போய், குறிப்பிட்ட வீட்டை அடைந்தோம்!'' என சந்தோஷப்படுகிறார் 108 ஆம்புலன்ஸ் பைலட் பிரகாஷ்.

– ஸ்ரீ

# அவர்களைப் போலவே அவர்களுடைய சருமமும் பரிசுத்தமாக இருக்கட்டும்.

ஃபுட்பால், கிரிக்கெட், லாங் சைக்கிள் ரைட்ஸ், மணல் வீடு கண்ணாமூச்சி. இதெல்லாம் கோடை காலத்தில் உங்கள் குழந்தைகளை பிசியாக வைக்கும் சில விஷயங்கள். ஆனால், இந்த விளையாட்டுகள் அனைத்திலும் பொதுவாக இருக்கும் ஓர் விஷயம் அவர்களை பாழாக்கும் ஒன்று. கிருமிகள். உங்கள் குழந்தைகள் நாள் முழுவதும் நன்றாக விளையாடி விட்டு வீட்டிற்குத் திரும்பும்போது நிச்சயம் கூடவே கொண்டு வருவது. அது உங்கள் குழந்தைகளுக்கு அதாவது அவர்கள் சருமத்திற்கு ஏதேனும் தீங்கு விளைவிக்குமா, விளைவிக்காதா என்பது நீங்கள் கையாள்வதைப் பொறுத்தது

உங்கள் குழந்தையை தினமும் ஓர் ஆன்டிசெப்டிக் சோப்பால் குளிப்பாட்டினால் இந்தப் பிரச்சினையைத் தீர்க்கும் வாய்ப்பு உள்ளது. ஆனால், ஓர் ஆன்டிசெப்டிக் சோப் கிருமிகளை அழிக்கும்போது சருமத்தின் தனித் தன்மையையும் சேர்த்து அழித்து விடும். சருமத்தின் அத்தியாவசிய விஷயங்கள் அனைத்தையும் பறித்து விடும். அதன் மென்மையையும்தான்! இதற்காக, உங்கள் குழந்தைகள் வெளியில் சென்று விளையாடி மகிழ்வதைத் தடுக்க முடியாது. பிறகு, என்னதான் செய்வீர்கள்? உங்களுக்குத் தேவை, கிருமிகளுக்கு எதிராக ஆற்றலுடன் செயல்படும் அதே சமயம் சருமத்தின் மீது கடுமை காட்டாத ஓர் சோப்.



Pears

Germshield™



புதினா சத்துக்களின் நற்குணங்களுடன் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு 99.9% கிருமிகளை அகற்றுவதுடன் சருமத்திற்கு 10 மடங்கு* சிறந்தது. மேலும், ஹ்யூமெக்டன்ட்ஸ் சருமத்தை நன்கு மாய்ஸ்சரைஸ் செய்து அதை மென்மையாக பரிசுத்தமானதாக ஆக்கும்.

**பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தையின் சருமம் ஆரோக்கியமாவதற்கு உதவி செய்து, கிருமிகளுக்கு கேடயம் போன்ற பாதுகாப்பை அளிக்கும். இது சருமத்தை மாய்ஸ்சரைஸ் செய்வதன் மூலம் அதை நீண்ட காலம் பாதுகாப்பாக வைக்கும்.**

உங்கள் குழந்தையின் சருமத்திற்குத் தேவையான பாதுகாப்பை எவ்வளவு சுலபமான வழியில் அளிக்கலாம் என்பது உங்களுக்கு இப்போது தெரிந்திருக்கும். உங்கள் குழந்தைகளும் கிருமிகளைப் பற்றிக் கவலைப்படாமல் கோடை விடுமுறையை இனிதே கழிக்கட்டும். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டை மறக்காமல் பயன்படுத்த வேண்டியதுதான். நீங்கள் குழந்தைகளை பராமரிப்பது போல், பேர்ஸ் ஜெர்ம்ஷீல்டு உங்கள் குழந்தைகளை பராமரிக்கும். மிக இதமாக, ஆனால் தேவைப்படும் இடத்தில் கடினமாக. எல்லாம் எதற்காக? கிருமிகளுக்கு பாடம் புகட்டும்போது சருமத்தை தண்டிக்கக் கூடாது, அல்லவா?

*இது சரும தன்மைகள் மற்றும் மாய்ஸ்சரைசர்களின் நிலைகளைப் பொறுத்தது.

www.masoompears.com

Pears

# கிருமிகளை அகற்றுங்கள்.

## சருமத்தின் பரிசுத்தத்தை அல்ல.

விளையாடும்போது குழந்தைகள் மீது கிருமிகள் படியும். பேர்ஸ் ஜெர்மிஷீல்டு கிருமிகள் மீது மட்டும் கடுமையாக இருக்கும். சருமத்தின் மீது அல்ல. இது **99.9% கிருமிகளை** அகற்றும் போது இதன் க்ளிசரீன் ஃபார்முலா சருமத்திற்கு ஈரப்பதம் அளித்து அதை மென்மையாக வைப்பதுடன், **சருமத்திற்கு 10* மடங்கு சிறந்ததாக** ஆக்கும்.

Germshield™



பா.சோமசுந்தரம்,

மேற்கு மாம்பலம்.

**நான் காலை உணவு சாப்பிட்டே பத்து வருடங்களுக்கு மேல் ஆகிறது. இதனால் எனக்கு ஏதாவது பாதிப்புகள் வருமா?**

**வயது நிர்வாக நிபுணர் கௌசல்யா நாதன்:**

மனிதன், சுமார் எட்டு மணி நேரம் (இரவு நேரத்தில்) எதுவுமே சாப்பிடாமல் இருப்பதால், காலை உணவு மிக மிக அவசியம். உடல் சுறுசுறுப்புக்கு மட்டும் அல்லாமல் நமது மூளையின் சுறுசுறுப்புக்கும் சேர்த்தே காலை உணவு பயன்படுகிறது. சரியான முறையில் காலை உணவைச் சாப்பிடாமல் போனால், நாம் ஈடுபடும் எந்த ஒரு வேலையிலுமே சரியாகக் கவனம் செலுத்த முடியாது. மனச்சோர்வு, தலைவலி போன்றவை அழையா விருந்தாளிகளாக வரும். உடலில் உள்ள இன்சுலின் அளவுகூட ஏறிவிடும் அபாயமும் அதிகம். உற்சாகத்துடன் இருக்க காலையில் இரண்டு இட்லி, இரண்டு தோசையுடன் காய்கறிகள் சேர்த்துச் செய்த சாம்பார், பால், ப்ரெட், ஆம்லெட், பொங்கல்... எனக் கட்டாயம் சாப்பிட வேண்டும். குறிப்பாக, பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் காலை உணவைத் தவிர்க்கவே கூடாது.



கௌசல்யா நாதன்

# பூண்டு சாப்பிட்டால்

உமாசங்கர், புவனகிரி.

**எங்கள் வீட்டில் உள்ள எலியின் தொல்லை தாங்காமல் நாங்கள் பூனை வளர்க்க ஆரம்பித்துள்ளோம். பூனை மூலம் ஏதாவது தொற்றுநோய் வருமா?**

**பொது மருத்துவர் மற்றும் மூளை நரம்பியல் நிபுணர் டாக்டர் வி.நாகராஜன்:**

எலித் தொல்லையிலிருந்து தப்பிக்க பூனை வளர்ப்பது ஒவ்வொருவரின் தனிப்பட்ட விருப்பம். ஆனால், ஆசையாக வளர்க்கும் பூனைக்கு முதலில் rabies vaccination போடுங்கள். பூனை கடித்தால், rabies என்று சொல்லக்கூடிய வெறிக்கடி நோய் வரும் வாய்ப்பு அதிகம். பூனை என்று மட்டுமல்ல எலி, அணில், வௌவால்... போன்ற பிராணிகள் நம்மைக் கடித்தால் rabies தொற்று வரும். பூனையின் சருமத் தீண்டுதலால் சுவாசக் கோளாறுகள், குறிப்பாக

வி.நாகராஜன்



உங்கள் சந்தேகங்களை 'கல்கி கிளினிக்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்போனில், kacli என்று டைப் செய்து ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் கேள்வி,பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ். செய்யலாம்.


கோ.உஜ்ஜீவனம்

ஆஸ்துமா, பலவித ஒவ்வாமைகள் தோன்றும். சில சமயங்களில் anthrax கிருமிகூட பூனையின் வழியாகப் பரவுவதாக மருத்துவ ஆய்வில் கண்டு பிடித்திருக்கிறார்கள். பூனையோடு சேர்ந்து படுக்கையில் உருண்டு விளையாடுவது, அதை எப்போதும் பக்கத்திலேயே வைத்துக் கொள்வது போன்றவை கூடவே கூடாது.

## கல்கி கிளினிக்

பாதிப்பு கட்டாயம் குறையும். காலையில் பச்சையாகப் பூண்டைச் சாப்பிட்டால் அது துர்நாற்றத்தையும் gastric irritationயும் ஏற்படுத்தும். ஒரு கிராம் பூண்டை மோரோடு கலந்து சாப்பிடுவது நல்லது. பூண்டைச் சாப்பிடுகிறோமே நமக்கு கொலஸ்ட்ரால் இனி இல்லை என நினைத்துக்கொண்டு கொலஸ்ட்ராலுக்கான மாத்திரையை நிறுத்தக்கூடாது.

# கொழுப்பு குறையுமா?

**விஜயம் பாஸ்கர், மரக்காணம்.**

***காலையில் வெறும் வயிற்றில் பூண்டைச் சாப்பிட்டால் உடலில் உள்ள கொழுப்பு குறையும் என்கிறார்களே... உண்மையா?***

**சித்த மருத்துவர் கோ.உஜ்ஜீவனம்:**

உண்மைதான். சித்த மருத்துவக் கூற்றுப்படி, ஒருவரது உடலில் உள்ள கொலஸ்ட்ரால், முத்தோடம் அதாவது வாதம், கபம், பித்தத்தையும் பாதிப்படைய செய்து விடும். பூண்டைச் சாப்பிடுவதால் இந்த முத்தோடத்தில் உள்ள



# கல்கி




2010 ஆகஸ்ட் 22
விக்ருதி ஆவணி 6
மலர் : 69
இதழ் : 4


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## புத்துணர்ச்சிக் கூட்டணி!

திராவிடக் கட்சிகளை உள்ளடக்காத கூட்டணி தமிழகத்தில் உருவாகக்கூடும் என்கிறார் பா.ம.க. தலைவர் ராமதாஸ்.

தேர்தல் குறித்து அவர் மட்டுமின்றி, மற்ற கட்சியினரும் சிந்திக்க ஆரம்பித்துள்ள சூழலில், தமிழகத்துக்கு எத்தகைய கூட்டணி அவசியம் தேவை என்பதை ஆராய்வது நல்லது.

தி.மு.க.-அ.தி.மு.க. தலைவர்களிடையேயான அறிக்கைகளைப் பார்க்கையில், அவர்கள் இருவருமே மற்றவர் ஆட்சியைப் பிடித்துவிடக் கூடாது என்பதில்தான் குறியாக இருப்பது புரிகிறது. தேர்தல் வெற்றியை எதிர்பார்த்து ஜெயலலிதா பேரிலான வழக்குகள் முடிவுக்கு வராமல் இழுக்கடிக்கப்பட்டு வருகின்றன. தி.மு.க. அரசோ, இலவசங்களின் ஊற்றுக்கண்ணாகவும் சட்டம் ஒழுங்கைப் பாதுகாக்க இயலாத நிலையிலும் குடும்ப அரசியல் நடத்திக் கொண்டிருப்பதாகப் பெயர் பெற்று விட்டது.

திராவிடக் கட்சிகளிலிருந்து ஒரு மாற்று வேண்டும் என மக்கள் கருதக்கூடிய இந்தத் தருணத்தில், அத்தகைய ஒரு கூட்டணியைப் பற்றி ராமதாஸ் பேச்சு எடுத்திருக்கிறார். இது தொடர்பாக, முக்கியமான சில விஷயங்களை அறிவித்தால் மக்களுக்கு நம்பிக்கை பிறக்கும்.

● குறைந்தபட்ச கொள்கை ஒப்புதல் - செயல்திட்டம் வெளியிடப்பட்டு, அதன் அடிப்படையில் ஆட்சி நடக்கும் என்று உறுதி அளிக்க வேண்டும்.

● கூட்டணியாக மக்களைச் சந்தித்து வோட்டுக் கேட்டு,




கூட்டணி ஆட்சி நடத்துவதாகவும் வெளியிலிருந்து ஆதரவு என்ற பேச்சு இராது என்றும் ஒப்புதலளிக்க வேண்டும்.

- தொகுதிகள் பங்கீட்டில் சுமுகமான, நேரான அணுகுமுறையைக் கையாள வேண்டும்.
- தேர்தல் முடிந்த பிறகு பேரங்களுக்கு அவசியம் ஏற்படாத வகையில் முன்னமேயே முதல்வர் பொறுப்புக்கு நடுநிலையாளரைத் தேர்வு செய்யும் புரிந்துணர்வு வேண்டும்.
- திராவிடக் கட்சிகளுக்கு மாற்று என்கிறபோது, தி.மு.க., அ.தி.மு.க.வின் நிழல் படியாத அனைத்துக் கட்சிகளையும் ஏற்கக்கூடிய ஒரு கூட்டணியாக அமைய வேண்டும்.

விஜயகாந்தின் ஒத்துழைப்பை ஏற்க விரும்பாததாலோ, அவரது கட்சியை ஒரு திராவிடக் கட்சியாகக் கருதியோ தே.மு.தி.கவைப் புறக்கணிப்பது, மூன்றாவது அணியின் தோல்விக்குத் தான் வித்திடும். காங்கிரஸ், கம்யூனிஸ்ட்டுகள், தே.மு.தி.க, பா.ம.க. கொண்ட கூட்டணி என்பது ஏதோ பகற்கனவுபோல் தோன்றினாலும், யதார்த்த நோக்கில் சாத்தியமான, புத்துணர்வுமிக்க கூட்டணியாக அமைய வாய்ப்புண்டு.

விஜயகாந்தைத் தவிர்த்துவிட்டு அமைக்கப்படும் கூட்டணியினால் வோட்டுகள்தான் பிரியுமேயொழிய, வெற்றி கிடைப்பது துர்லபம். மேலும், அப்படிப்பட்ட கூட்டணியினால் திராவிடக் கட்சிகளுள் ஒன்று மயிரிழை வித்தியாசத்தில் ஜெயித்து, குதிரை பேரம் செய்து ஆட்சி அமைக்கும் வாய்ப்பு பெருகும்.

பா.ம.க., இடம்பெறக்கூடிய அந்த மூன்றாவது அணி மதுவிலக்கை உறுதிசெய்ய முடியும். காங்கிரஸ் இடம்பெற்றால், தேசிய அளவிலான பங்கேற்புக்கும் மத்திய அரசை மிரட்டாத நல்லுறவுக்கும் வழி ஏற்படும். தே.மு.தி.க. இடம்பெறுகிறபோது இளைஞர்களை முன்னிறுத்தும் ராகுல் காந்தியின் செயல்திட்டத்துக்கு உதவிகரமாக இருக்கும். கம்யூனிஸ்ட்டுகள் கைகோப்பதால் நேர்மை, சமூகநீதி உறுதிசெய்யப்படும்.

பணத்தைக் கொண்டு வோட்டை வாங்கும் போக்குக்கு எதிராக, இந்த மூன்றாவது அணி ஒருமித்துக் குரல் கொடுத்துப் பணியாற்றினால், தமிழகத்தைக் குட்டிச்சுவராக்கிவரும் பணநாயகம் ஒடுக்கப்படும். ஜனநாயகம் புத்துணர்ச்சி பெறும். ◆

# சாலையில் பறக்கும் வைத்தியம்!




தமிழகம் முழுவதிலும் 385 ஆம்புலன்ஸ்கள். 24x7 ஒரு டிரைவர் (டிரைவர்களை பைலட் என்கிறார்கள்), ஒரு மருத்துவ உதவியாளர் சகிதம் சேவைக்குத் தயாராக நின்று கொண்டிருக்கின்றன. இவர்களுக்குத்தான் ஒவ்வொரு நாளும் எத்தனை விதமான அனுபவங்கள்! இரு பைலட்களைச் சந்தித்தோம்.

"போன மாசம் ரிப்பன் பில்டிங்கில டியூட்டி. ராத்திரி பத்தரை மணிக்குச் சூளையில ஒரு ஆக்ஸிடென்ட்னு தகவல். அஞ்சு நிமிஷத்துல ஸ்பாட்ல இருந்தோம். விபத்துக்குள்ளான ரெண்டு பேரும் பைக்ல வேகமா போன போது ஸ்கிட் ஆகி கீழ விழுந்து நினைவில்லாம கிடந்தாங்க. நிறைய ரத்தம் வீணாயிடுச்சு. முதலுதவி செஞ்சு, ஆம்புலன்ஸ்ல ஏத்தி ஜி.ஹெச்ல சேர்த்தோம். 'சீக்கிரமா அழைச்சுக்கிட்டு வந்ததால உயிரைக் காப்பாத்திடலாம்னு டாக்டர் சொன்னப்போதான் மனசு நிம்மதியாச்சு!' - இது டிரைவர் மைக்கேலின் அனுபவம்.




மைக்கேல் • லட்சுமணன்

"திருவண்ணாமலை மாவட்டம் ஒரு ஆரம்பச் சுகாதார நிலையம் ஒன்றில் பிரசவத்துக்கு அட்மிட்டான ஒரு பெண்மணியின் நிலைமை ரொம்ப சீரியஸ். அவரை அழைத்துக்கொண்டு 30 கி.மீ. தூரத்தில் உள்ள திருவண்ணாமலை மாவட்ட அரசு மருத்துவமனைக்குச் சென்றோம். ஆஸ்பத்திரிக்கு இன்னும் ஐந்தே கி.மீ. இருக்கும்போது, அந்தப் பெண்மணிக்கு வலி அதிகமானது. உடன் வந்த கர்ப்பிணிப் பெண்ணின் அம்மா, 'வண்டியை இன்னும் வேகமா ஓட்டுப்பா ஆஸ்பத்திரிக்குப் போயிடலாம்' என்று அவசரப்படுத்தினார். ஆனால், ஆம்புலன்ஸில் இருந்த மருத்துவ உதவியாளர், நிலைமையின் தீவிரத்தை உணர்ந்து தாமதிக்காமல், ஆம்புலன்ஸை ஓரம் கட்டச் சொன்னார். "எங்களுக்கும் அக்கா, தங்கை இருக்காங்க. ஆபத்துக்குத் தயங்காதீங்க. ரெண்டு உயிரைக் காப்பாத்தறதுதான் முக்கியம்!" என்று சொல்லிப் புரிய வைத்தார். அடுத்த சில நிமிடங்களில் பிறந்த ஆண் குழந்தையை எடுத்துத் தாயிடம் கொடுத்தபோது எங்கள் முகத்தில் உலகத்தையே ஜெயித்த சந்தோஷம்" என்கிற லட்சுமணன், "சில தருணங்களில் எவ்வளவுதான் துரிதமாக விபத்து நடந்த இடத்துக்குப் போனாலும், உயிரைக் காப்பாற்ற முடியாமல் போய் விடுவதும் உண்டு. வந்தவாசி அருகில் இரவு நேரத்தில் ஒரு பள்ளிக்கூடத்தின் உயரமான கட்டடத்தில் ஏறி நின்று மின்சார வேலை பார்த்துக்கொண்டிருந்தவர் தவறிக் கீழே விழுந்து விட்டதாகத் தகவல் வந்தது. ஸ்பாட்டுக்கு விரைந்து சென்றும், நாலு மாடியிலிருந்து கீழே விழுந்தவர் தலையில் அடிபட்டு இறந்திருந்தார். ரொம்பவும் பரிதாபமாக இருந்தது" என்று வருத்தப்படுகிறார்.

-எஸ். சந்திரமௌலி

**கொ**ண்டு வந்து கொட்டும் குறுவை என்பார்கள். குறுகியகாலப் பயிர் என்பதால், இதன் மீது விவசாயிகளுக்குத் தனி மோகம். ஆடி பிறந்துவிட்டால் போதும், காவிரிப் பாசன விவசாயிகளில் ஒருவரை ஒருவர் பார்க்கும்போது 'என்ன குறுவை நட்டுட்டியா?'ன்னுதான் பேச்சையே தொடங்குவார்கள். இந்த வருடம் நான்கில் மூன்று பங்கு விவசாயிகளிடம், இதற்கான உற்சாகக் கேள்வி இல்லை. காரணம், கல்லணைக்குக் கிழக்கே காவிரி டெல்டாவில் சுமார் நான்கு லட்சம் ஏக்கரில் குறுவை பயிரிட்டிருக்க வேண்டும். ஆனால், இந்த வருடம் ஒரு லட்சம் ஏக்கரில் மட்டுமே குறுவை சாகுபடி.

''இருபது வருடங்களுக்கு முன்பு வரைக்கும் எங்கப் பகுதியில் குறுவை சாகுபடி நல்லாத்தான் நடந்தது. அதுலேர்ந்து ஒவ்வொரு வருஷமும் படிப்படியா கொறைஞ்சு போச்சு. ஜூன் 12 மேட்டூர் திறந்தாத்தான்



கோவிந்தராஜ்



நீலமேகம்



துரைமாணிக்கம்

# குளறுபடியில் குறுவை சாகுபடி!

குறுவை சாகுபடி. இல்லாட்டி பம்புசெட்டை நம்பியே பொழப்பு ஓடுது. அதுக்கு எல்லா விவசாயிகள்கிட்டயும் பம்புசெட் வசதி இருக்கணுமே? தஞ்சாவூர்லேர்ந்து வடுவூர் - மன்னார்குடி வரைக்கும் சொற்ப விவசாயிங்க குறுவை நட்டு இருக்காங்க. அதுக்குக் கிழக்கே சுத்தமா யாரும் நடலை. மோட்டார் பம்பு செட் வசதி வந்துட்டா காவிரி டெல்டாவுல நாலு லட்சம் ஏக்கர்லயும் குறுவை சாகுபடி பண்ணலாம். தஞ்சை மாவட்டத்துல மட்டும் பதினாறாயிரம் விவசாயிகள், பம்பு செட் மோட்டார் மின் இணைப்புக்கு விண்ணப்பித்து, பல வருடங்களாகக் காத்திருக்காங்க!'' என்று குற்றம்சாட்டுகிறார் தமிழ்நாடு விவசாயிகள் சங்க முன்னாள் மாவட்டச் செயலாளர் நீலமேகம்.


● தேவிகா

அதனை ஆமோதிப்பது போலிருக்கின்றன பல விவசாயிகளின் ஆதங் கங்கள். ''மூணு லட்சம் ரூபா செலவு செஞ்சு போர் போட்டு, பம்ப்செட் மின் இணைப்புக்கு விண்ணப்பிச்சு அஞ்சு வருஷம் ஆவுது. இன்னும் இணைப்பு வரலை. எங்க ஆறு ஏக்கர் வயல்ல குறுவை சாகுபடி பண்றதே இல்லை. காவிரித் தண்ணீரும், மழையும் கைகொடுத்தால் மட்டுமே சம்பா சாகுபடி!'' என்கிறார் தென்னமநாடு விவசாயி கோவிந்தராஜ்.

குறுவை சாகுபடி ஆகியுள்ள ஒரு லட்சம் ஏக்கரிலும், இருபத்தைந்தாயிரம் ஏக்கர் பயிர் பரவலாகப் பட்டுப்போயுள்ளன. தண்ணீர் இல்லாது பலரது வயல்களும் காய்ந்து வெடிக்கத் துவங்கியுள்ளன. ஒக்கநாடு கீழையூர் விவசாயி தேவிகாவின் சோகம் வேறுவிதமானது. ''எங்

## ஒன்பதேகால்

மேட்டூர் அணை கட்டிமுடித்து உபயோகத்துக்கு வந்து எழுபத்தியாறு ஆண்டுகள் ஆகின்றன. இதில் ஜூன் 12க்கு மேட்டூர் அணை திறந்து விடப்படாத ஆண்டுகளில் எல்லாம், குறுவை சாகுபடி குற்றுயிர் சாகுபடியாகவே நடந்து வருகிறது. ''குறுவை சாகுபடி நான்கு லட்சம் ஏக்கரிலும் முழுசாக நடைபெறணும்னா, தஞ்சை-நாகை-


● எஸ்.ரங்கநாதன்

## எண்பது நாள் பிரசன்னா!

மேட்டூர் அணை குறிப்பிட்ட தேதியில் திறந்துவிடப்படாததே, குறுவை சாகுபடி இழப்புக்குக் காரணம். அதற்கு கர்நாடகம் ஒத்துழைக்காததும் முக்கியக் காரணம். 1995 வரை இதற்கு கர்நாடகமே முழுப் பொறுப்பு. அதன் பின்னர் குறுவை சாகுபடி பரப்பு படிப்படியாகக் குறைவதற்குக் காரணம், புவி வெப்பமயமாகி வருதல் எனப்படும் குளோபல் வார்மிங் என்பதனை காவிரிப் பாசன விவசாயிகள் தற்போது தான் உணர்ந்து வருகின்றனர். ஆடி மாதத்தில் காற்று வீசும். தென்மேற்குப் பருவ

களுக்கு ஆத்துப் பாசனம் கிடையாது. பம்புசெட்டை நம்பித்தான் வெள்ளாமை. மூணு ஏக்கர் குறுவை நட்டுப் பயிரிட்டோம். இருவது நாளா பக்கத்துல ஒரு டிரான்ஸ்பார்மர் ரிப்பேரா இருக்கு. எங்க ஏரியாவுல தண்ணிப் பாய்ச்ச எந்தப் பம்புசெட்டும் இயங்கலை. எங்க மூணு ஏக்கர் பயிரும் பட்டுப் போச்சு. நாங்க போட்டிருந்த முதலும் போச்சு!'' என்கிறார்.

''மூன்று லட்சம் ஏக்கரில் குறுவை பயிரிடப்படாததால், அதன் விளைச்சலான சுமார் பத்து லட்சம் டன் நெல் உற்பத்தியை இழந்துள்ளோம். நெல் மற்றும் வைக்கோலின் மதிப்பு சுமார் ஆயிரம் கோடி ரூபாய் எனச் சொல்லப்படுகிறது. குறுவை சரிவர சாகுபடியாகாத ஆண்டுகளில் எல்லாம், இது போன்ற அளவுக்கு நெல் உற்பத்தி இழப்பினைச் சந்தித்து வருகிறோம். இது மட்டுமல்ல, விவசாயக் கூலித் தொழிலாளிகளும் வேலை வாய்ப்பு இழப்பினை நேரடியாக எதிர்கொள்கின்றனர்.

இந்த ஆண்டு என்றல்ல. கடந்த முப்பது ஆண்டுகளாகவே இதுபோன்ற குறுவை இழப்பு ஏற்பட்டு வருகிறது. விவசாயக் கூலித் தொழிலாளிகள் பெரும்பாலானோர் திருப்பூருக்கும், அண்டை மாநிலங்களுக்கும் வேலை நாடிச் சென்று தங்கியுள்ளனர். தஞ்சை, நாகை, திருவாரூர் மாவட்டப் பகுதிகளில் பல கிராமங்களில் விவசாயக் கூலிகளின் வீடுகளில் பூட்டுகள் தொங்குகின்றன. திருப்பூர் மற்றும் வெளிமாநிலங்களில் வேலை செய்பவர்கள், விடுமுறைக்கு இங்கு வந்து போவதோடு சரி!'' என்கிறார் தமிழ்நாடு விவசாயிகள் சங்க மாநிலப் பொதுச் செயலாளர் துரைமாணிக்கம்.



● என்.நடராஜன்

## ...ட்சம் பம்பு செட்!

...திருவாரூர் மாவட்டங்களில் மொத்தம் ஒண்ணே கால் லட்சம் பம்ப் செட்டுகள் இயங்க வேண்டும்!'' என்கிறார் பொதுப் பணித்துறையின் முன்னாள் மேற்பார்வைப் பொறியாளரும், காவிரிப் பாசன விவசாயிகள் நலச் சங்கத்தின் தொழில் நுட்ப ஆலோசகருமான என்.நடராஜன்.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

மழை பொழியும். இப்போது இரண்டையுமே காணவில்லை. மாறாக, ஆடி மாதத்தில் சித்திரை மாத வெயில் அடிக்கிறது. இதற்கெல்லாம் குளோபல் வார்மிங்கே அடிப்படைக் காரணம். குறுவை சாகுபடியில் ஆண்டுதோறும் நாம் இழந்து வரும் நெல் உற்பத்தி அளவினை ஈடுசெய்ய முடியாது. தண்ணீர்த் தட்டுப்பாடு பிரச்னையைச் சமாளிக்க வேண்டும். அதற்கு நாம் தற்போது பயிரிட்டு வரும் நூற்றியிருபது நாள் குறுவை சாகுபடியில், மாற்றம் கொண்டுவர வேண்டும். பரவலாக அறியப்படாத எண்பது நாள் குறுவைப் பயிரான பிரசன்னா (IET 7564) நெல் ரகத்துக்கு, நாம் மாற வேண்டும்'' என்கிறார் காவிரி டெல்டா மேம்பாட்டு ஆராய்ச்சி மையத்தின் தலைவர் மன்னார்குடி எஸ்.ரங்கநாதன்.



# புத்தகக் கடை

நாங்கள் சிறுவர்களாக இருந்தபோது சிகந்தராபாத் ரயில் நிலையம் ஒரு கருங்கல் கட்டிடமாக இருந்தது. விரைவு வண்டிகள் என்று சொல்லப்படுபவை மாலை ஏழு மணிக்குப் பிறகு. பகலில் பாசஞ்சர் வண்டிகள் போலாரம் லோகல் வண்டிகள் தான்.

ரயில் நிலையத்துக்கு ஒரு போர்டிகோ உண்டு. உயர் வகுப்புப் பெட்டிகள் அந்தப் போர்டிகோவுக்கு எதிரே நிற்கும். அந்த நாளில் ரயில் வண்டிகளில் மொத்தம் எட்டு அல்லது பத்து பெட்டிகள்தான்.

எனக்கும் சுந்தர் குமாருக்கும் சிகந்தரா பாத் ரயில் நிலையம் ஒரு குட்டி சுவர்க்கம் போல. ரயில் நிலையத்தில்தான் ஆங்கில புத்தகங்கள், பத்திரிகைகள் விற்கும் கடை இருந்தது.

சிகந்தராபாத்தில் ராமா புக் டிப்போ, வெங்கடரமணா புக் டிப்போ என்று இரு கடைகள் உண்டு. இங்கு தெலுங்கு புத்தகங் களும் பள்ளிப்பாடப் புத்தகங்களும் கிடைக் கும். கிடைக்கும் என்பது நாங்கள் மற்றவர்களை முந்தி கொண்டால்தான். பல மாணவர்களுக்குப் புத்தகம் கிடைக்காது. அதற்காக அவ்வப்போது திட்டு, அடி கிடைக்கும். ஆனால் அந்த நாள் ஆசிரியர்கள் ஒவ்வொரு பாடத்துக்கும் 'நோட்ஸ்' என்று தருவார்கள். அவர்கள் சொல்லச் சொல்ல நாம் எழுதிக்கொள்ள வேண்டும். அந்த நோட்ஸை மட்டும் படித்து நூற்றுக்கு நூறு வாங்கலாம்.

ஆக்ஸ்போர்டு புக் ஷாப் என்று ஒன்றிருந் தது. அதை நெருங்கவே பயமாக இருக்கும்.

ரயில் நிலையம் புத்தகக் கடையின் பெயர் வீலர் அண்ட் கம்பெனி. அன்று தமிழ் நாட்டில் பெரிய ரயில் நிலையங்களில் இருந்த ஹிக்கின்பாதம்ஸ் கடைகள் போல வடநாட்டில் வீலர். அங்கு தொங்கவிட்டிருக் கும் பத்திரிகைகளின் அட்டைகளே மிகவும் அழகாக இருக்கும். அமெரிக்கப் பத்திரிகை களான 'லைஃப்', 'சாடர்டே ஈவினிங் போஸ்ட்', இங்கிலாந்துப் பத்திரிகைகளான 'ஸ்டிராண்டு', 'ஆர்கஸி' முதலியன கண்ணில் ஒத்திக் கொள்ளலாம் போல இருக்கும். இப் பத்திரிகைகளுக்கு ஒரே இந்தியப் போட்டி 'இலஸ்டிரேடட் வீக்லி ஆஃப் இந்தியா.' அன்று அதுவும் வெள்ளைக்காரர்கள் நடத்தியதுதான்.

வீலர் கடையில் எல்லாப் பொருட்களுக் கும் பிரிட்டிஷ் நாணய விகிதம். அதை பி.ஜி. என்பார்கள். நிஜாம் ராஜ்ஜியத்தின் இதர இடங்கள் அநேகமாக அனைத்திலும் எச்.சி.



# அசோகமித்திரன்

அதாவது ஹைதராபாத் கரன்சி. இன்று பவுன் விலை நாளுக்கு நாள் மாறுவது போல இந்த இரு விகிதங்களின் நாணய மாற்று விகிதம் மாறும். ஆனால் ஒரு பொது முறை உண்டு. அன்று ரூபாய்க்குப் பதினாறு அணாக்கள். ஒரு அணாவுக்கு ஆறு பைசா. ஒரு பிரிட்டிஷ் அணாவுக்கு ஹைதராபாத் பணம் ஒரு பைசா அதிகம் தர வேண்டும். கணக்கில் எங்களுக்கு இது தனிப் பாடம். வீலர் கடையில் ஹைதராபாத் பணத்தை வாங்கிக் கொள்வார்கள். ஒரு ரூபாய் என்று அச்சிட்டிருந்தால் அந்த ஒரு ரூபாயுடன் பதினாறு பைசாவும் தர வேண்டும். அங்கு விற்கப்படும் பத்திரிகைகள், புத்தகங்கள் அகில இந்திய விகிதத்தில் விலை நிர்ணயிக்கப்பட்டவை.

எங்களுக்கு அந்தக் கடையில் தேவையானது ஓர் ஆங்கில வாரப் பத்திரிகையான 'பிக்சர் கோயர்.' பதினாறு பெரிய பக்கங்கள். மிக இலேசான பழுப்பு வண்ணத்தாளில் நல்ல பழுப்பு மையில் அச்சிடப்பட்டிருக்கும். 'செபியா' அல்லது 'செபியாடோன்' என்று கூறுவார்கள். அதிலுள்ள புகைப் படங்கள், கட்டுரைகள், விமர்சனங்கள், செய்திகள் அனைத்திலும் ஆசிரியரின் தர நிர்ணயம் தெரியும். இப்படி ஒரு பத்திரிகை இருக்கிறது என்றும் அது ரயில் நிலைய வீலர் கடையில் கிடைக்கும் என்றும்

சுந்தர்குமார்தான் கண்டுபிடித்தான். என் வீட்டை விட அவன் வீடு ரயில் நிலையத்துக்குச் சற்று அருகாமையில் இருந்தது. நாங்கள் சைக்கிள் விடுபவர்களாக இருந்தாலும் வீலர் கடைக்கு நடந்தே போவோம். ரயில் நிலையத்தில் கட்டணம் இல்லாமல் சைக்கிளை நிறுத்தி வைக்க முடியாது.

நான் இன்னொரு விபத்தையும் சந்தித்தேன். வீலர் கடை ரயில் நிலையத்தின் பிரதான பிளாட்ஃபாரத்தில் இருந்தது. ரயில் பிளாட்ஃபாரத்தில் நுழையாமல் வீலர் கடைக்குப் போக முடியாது. ரயில் உண்டோ இல்லையோ பிளாட்ஃபாரம் கம்பிக் கதவருகே ஒரு கறுப்புக் கோட்டுக்காரர் இருப்பார்.

நான் முதல் இரண்டு மூன்று முறை எந்தச் சிக்கலுமில்லாமல் புத்தகக் கடைக்குப் போய்விட்டு வந்தேன். 'பிக்சர்கோயர்' ஒரு குறிப்பிட்ட தினம்தான் வரும் என்றில்லை. அந்த நாளில் அயல் பத்திரிகைகள் பெரும்பாலும் கப்பலில்தான் வரும். சில சந்தர்ப்பங்களில் இரு இதழ்கள் ஒரே சமயத்தில் வந்துவிடும். என்னிடம் நிஜாம் நாணயம் சரியாக நான்கணா நான்கு பைசா இருக்கும். கல்லூரியிலிருந்து திரும்பி வரும்போது ராணிகஞ்ஜ் என்ற இடத்தில் இறங்கி வீட்டுக்கு நடந்து வந்தால் ஒன்றரை அணா மிச்சம் பிடிக்கலாம். ஆதலால் மீண்டும் நான்கணா நான்கு பைசா சேருவதற்குள் அந்த இதழ் விற்றுப் போய்விடும்.

கறுப்புக் கோட்டுக்காரர் என்னைத் தடுத்து நிறுத்தினார். ''எங்கே பிளாட்ஃபாரம் டிக்கெட்?''

''என்ன?''

''என்ன என்ன? எங்கேடா பிளாட்ஃபாரம் டிக்கெட்?''

''எங்கிட்டே இல்லையே?''

''பின்னே ஏன் அங்கே போனே? ஏதாவது சுருட்டிக் கொண்டு போவதற்கா?''

''நான் வீலர் கடைக்குப் போனேன்.''

''அங்கே சுருட்டறதுக்கா? அங்கேதான் நிறையத் திருட்டு.''

''இதோ பாருங்க என் கையிலே பைசா. நான் ஒரு பத்திரிகை வாங்க வந்தேன். அது இங்கேதான் கிடைக்கும்.''

''காக காமி.''

''இதோ பாருங்க.''

அந்த ஆள் அதிலிருந்து ஓரணா எடுத்துக் கொண்டார். ''போ'', என்றார்.

நான் அழுதுவிட்டேன். ''பின்னே எப்படிடா சொல்லாம கொள்ளாம உள்ளே போனே? பிளாட்ஃபாரம் டிக்கெட் ஒரு அணா, தெரியுமில்லே?''

''நான் மறுபடியும் பத்திரிகை வாங்க முடியாது சார். அது பி.ஜி. நாலணா.''



அந்த ஆள் என்னை உற்றுப் பார்த்தார். ''சரி போ. இனிமே எங்கிட்டே சொல்லிட்டுப் போ. நேரே புக்ஸ்டால் போய்த் திரும்பிடணும்.''

எனக்கு வீடு திரும்பும்வரை உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. முதலில் ஒரு அணா இழப்பு எனக்கு மிகப் பெரியது. இரண்டாவது, இது அப்பாவுக்குத் தெரிந்தால் மிகவும் சங்கடம்.

நான் ஒரு மாதம் வரை 'பிக்சர் கோய'ரும் வேண்டாம் 'டிராமா கோய'ரும் வேண்டாம் என்று இருந்தேன். காலம் சில விஷயங்களைத் தெளிவுபடுத்தியது. அந்த ஆள் பிளாட்ஃபாரமுக்கே போகக் கூடாது. புத்தகக் கடைக்குப் போகக் கூடாது என்று சொல்லவில்லை. சொல்லி விட்டுப்போ, நேரே புத்தகக் கடைக்குப் போய்த் திரும்பி வா என்றுதான் சொன்னார். அது நியாயம்தானே.

மீண்டும் ஒரு நாள் நிஜாம் நாணயம் நான்கணா நான்கு




பைசா எடுத்துக்கொண்டு ரயில் நிலையம் சென்றேன். இம்முறையும் ஒரு கறுப்புக் கோட்காரர் இருந்தார். நான் அவரிடம், ''வீலர் கடைக்குப் போக வேண்டும்'' என்றேன். முதலில் நான் சொன்னது புரியவில்லை. மீண்டும் சொன்னேன்.

''போ... எங்கிட்டே ஏன் சொல்லறே?''

''சொல்லிட்டுப் போகணும் இல்லியா?''

அவர் ச்ச்சா என்று சப்புக் கொட்டினார். அன்று ஓர் இதழ் 'பிக்சர்கோயர்' வந்திருந்தது. அதை வாங்கி வரும்போது கறுப்புக் கோட்டுக்காரர் ''என்ன அது!'' என்று கேட்டார்.

நான் அவர் கையில் கொடுத்தேன். அவர் பிரித்துப் பார்த்தார். ''நீ நாளைக்கு வாயேன். நான் படித்துவிட்டுத் தருகிறேன்'' என்றார்.

கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போயிற்று. அதன் பிறகு நான் தினம் ரயில் நிலையம் போனேன். கம்பிக் கதவருகே ஆட்கள் மாறிக்கொண்டே இருந்தார்கள். ஒரு நாள் அந்த ஆள் இருந்தார். வெறுங்கையோடு.

''சார், 'பிக்சர்கோயர்.''

''என்ன?''

''நீங்க எங்கிட்டேருந்து வாங்கிக் கொண்ட பத்திரிகை.''

''நானா?''

''ஆமாம்... நீங்களேதான்.''

''என்ன அது?''

''அதான் 'பிக்சர்கோயர்!''

''அது என்னது?''

''அது ஒரு பத்திரிகை சார். நான் கஷ்டப்பட்டு வீலர் கடையிலேர்ந்து வாங்கிண்டு வந்தேன். நீங்கப் படிச்சுட்டுத் தர்றேன்னு வாங்கிண்டீங்க.''

''நான் அந்த மாதிரி செய்ததே இல்லையே? அது வேறே ஏதாவது டிக்கெட் கலெக்டரா இருக்கும்.''

''இல்லை சார்... நீங்கதான்.''

''நான் இல்லேன்றேன். நீ பேசிண்டே போறீயே? எங்கேடா பிளாட்ஃபாரம் டிக்கெட்?''

''நான்... நான்...'' நான் அழத் தொடங்கி விட்டேன். அப்போது ஒரு லோக்கல் வண்டி வந்து டஜன் கணக்கில் பயணிகள் வெளியே போனார்கள். அவர்களில் ஒருவரைக் கூட அந்த டிக்கெட் கலெக்டர் டிக்கெட் கேட்கவில்லை. அவர்களாகக் கொடுத்தவர்களிடம் வாங்கிக் கொண்டார்.

என் உலகமே தொலைந்து போய்க் கொண்டிருக்கிற மாதிரி உணர்ந்தேன். காசு கொடுத்து ஒரு பத்திரிகை வாங்குவதற்கு இவ்வளவு தடைகளா? ஏன் இந்தக் கறுப்புக் கோட்காரர்கள் இவ்வளவு எளிதாக ஒரு சிறுவனை ஏமாற்றத் தயங்காமல் இருக்கிறார்கள்? அடுத்த முறை ஒரு அணா பிளாட்ஃபாரம் டிக்கெட் வாங்கிக் கொண்டு போய் 'பிக்சர்கோயர்' வாங்கி வந்தால் இந்தக் கறுப்புக் கோட்டுக்காரர்கள் அதைப் பிடுங்கிக் கொள்ள மாட்டார்கள் என்று என்ன உத்தரவாதம்? வீலர் மாதிரி ஒரு கடை வேறெங்காவது இருக்கக் கூடாதா?

நான் ரயில் நிலையம் எதிரில் இருந்த சாலையில் ஒரு ஓரமாக நின்றுகொண்டு செய்வதறியாது விழித்துக் கொண்டிருந்தேன். என் துக்கம் தலையைப் பிளந்துவிடும் போலிருந்தது. அப்போது ஒரு சிவப்பு டிரக் ரயில் நிலையக் கட்டடத்தில் ஒரு மூலையில் நின்றது. அதிலிருந்து தபால் மூட்டைகளைச் சுமந்து சிலர் அப்படியே ரயில் நிலையத்துள் போனார்கள். நான் அங்கே போனேன். டிக்கெட் கலெக்டர் நின்ற இடத்தை விட இங்குதான் நிறையப் பேர் போய் வந்து கொண்டிருந்தார்கள். நானும் பிளாட்ஃபாரம் உள்ளே போய் வீலர் கடைக்குப் போனேன். அன்று 'பிக்சர்கோயர்' வந்திருந்தது. இரு நிமிடங்கள் முன்புதான் உலகமே பறி போனது போல வெயிலில் நின்றுகொண்டிருந்தேன். இப்போது என்னைக் காட்டிலும் ஆளும் ஜார்ஜ் அல்லது நிஜாம்கூட மகிழ்ச்சியுடன் இருக்க மாட்டார்கள்.

அன்று மாலை சுந்தர்குமார் வீட்டுக்குப் போனேன். அவன் வீட்டில் ரேடியோ உண்டு. அவன் 'கேளு, கேளு' என்று ஒரு ஸ்டேஷன் வைத்தான். பொதுவாகவே அன்று இந்திப் பாட்டுகள் நன்றாக இருக்கும். அந்த ஸ்டேஷனில் அந்தப் பாடல்களிலும் மிகச் சிறந்தவையை அளித்துக் கொண்டிருந்தார்கள்.

"என்ன ஸ்டேஷன்?" என்று கேட்டேன்.

"ரேடியோ போர்டு!" என்று அவன் பதில் தந்தான்.

"அது எங்கே இருக்கு?"

"தெரியாது. ஆனால் இந்திப் பாட்டுக்கு இதை மிஞ்சி ரேடியோ ஸ்டேஷன் கிடையாது."

உண்மை. பல ஆண்டுகள் கழித்து அது ரேடியோ போர்டு இல்லை, ரேடியோ கோவா என்று தெரிந்துகொண்டேன்.

"இந்த வாரம் 'பிக்சர்கோயர்' வாங்கிட்டியா?"

"இல்லேப்பா. போகணும். எங்கிட்டே இரண்டு பைசா குறையுது. அப்பா அம்மா இரண்டு பேர் கிட்டேயும் நான் வாங்கிட்டேன். இந்த மாசம் தரமாட்டாங்க. நீ வாங்கினியா?"

"ஆமாம். நான் உனக்குத் தர்றேன். ஆமாம், நீ பிளாட்ஃபாரம் டிக்கெட் வாங்கிண்டா போறே?"

"ஏம்ப்பா, இதை வாங்கறதுக்கு யாராவது பிளாட்ஃபாரம் டிக்கெட் வாங்குவாங்களா?"

"என்னை டிக்கட் கலெக்டர் ரொம்ப சதாய்க்கிறான்."

"நீ அவங்கிட்டே எதுக்குப் போறே?"

"பின்னே எப்படி உள்ளே போறது?"

"சும்மா தபாலோட, இல்லே பார்சல் காரன் வழியிலே போப்பா... தொந்தரவே இல்லை."

இதையும் எனக்கு முன்னால் சுந்தர் குமார் கண்டுபிடித்துவிட்டான்!

என் அப்பா இறந்த பிறகு நாங்கள் குடும்பத்தோடு சிகந்தராபாத்தை விட்டுச் சென்னை வந்துவிட்டோம். ரயிலேறப் போனபோது வீலர் கடையைப் பார்த்தேன். அது பூட்டி இருந்தது. ●

**"எதுக்கு நேத்து ஒண்ணுமில்லாததுக்கெல்லாம் சட்டசபையிலிருந்து வெளி நடப்புச் செஞ்சீங்க?"**

**"வேற ஒண்ணுமில்லை. என் மனைவி ஷாப்பிங் போகணும். சீக்கிரம் வந்துடுங்கோன்னு சொன்னா அதான்."**

**-எம்.எஸ்.மயில்**



# பாணா
## காத்தாடி

**வ**டசென்னை பையன்... ஃபேஷன் டெக்னாலஜி படிக்கும் ஸ்டூட் கேர்ள்... இருவருக்கும் இடையே கோடம்பாக்கக் குலவழக்கப்படி நிகழும் மோதல், உரசல், காதல், உருகல்... இன்னும் பிற இத்யாதிகள் கலந்த கதைதான் பாணா காத்தாடி. என்ன... ஹீரோவாக நடிகர் முரளியின் மகன் அதர்வா அறிமுகமாகியிருக்கிறார் என்பதுதான் சின்ன எதிர்பார்ப்பு!

அதர்வாவும் நடிக்கிறார், வெடிக்கிறார், துடிக்கிறார். ஆனால், வசனம் பேச மட்டும் வரவே மாட்டேங்குது. அதுவும் 'சென்னை பாஷை' அவருக்குச் சொன்ன பேச்சக் கேட்கவே மாட்டேங்குது.

அழகு ஹீரோயின் சமந்தா. அழகாய் இருப்பதால் படத்திலும் அழகாய்த் தெரிகிறார். காத்தாடி விடுகையில் மட்டும் அவர் குதூகலம் நமக்கும் தொற்றுகிறது!

படத்தைக் கலகலப்பாக, காமெடியாகக் கொண்டு போவது கருணாஸ்தான். 'கோத்துவிட்டாங்க ஸார்' என போலீஸ் ஸ்டேஷனில் புலம்புவது தொடங்கி அப்பா பாக்கெட்டில் திருடுவதை வரை அப்ளாஸோ அப்ளாஸ்!

மௌனிகாவும் பிரசன்னாவும் வாங்கிய காசுக்கு வஞ்சனையில்லாமல் நடித்திருந்தாலும், பிரசன்னாவை தாதா கேரக்டரில் ரசிக்க முடியவில்லை.

யுவன், பின்னணியில் மின்னுவதும், பாடல்களில் பம்முவதும் ஏனோ?

ரிச்சர் நாதனின் ஒளிப்பதிவில் குஜராத் காத்தாடித் திருவிழா இதம்.

முதல் படத்துக்கான எல்லா நிறை-குறைகளுடனும் இயக்குநர் பத்ரி வெங்கடேஷின் மெனக்கெடல் தெரிந்தாலும், பிரசன்னா கேரக்டரை எதிர்பார்க்க வைத்து ஏமாற்றிவிடுவது பெருங்குறை.

**பாணா காத்தாடி - அறுந்துபோன பட்டம்.**

**- மகிமைராஜன்**

செண்டிமெண்ட்

பொதுவாக எல்லாரும் கறுப்பு நிறத்தைத் துக்கத்தின் நிறமாகச் சொல்வார்கள். ஆனால், கறுப்புதான் எனக்கு அதிர்ஷ்ட நிறம். எந்த வேலை சுலபமாக முடியவேண்டும் என்று நினைத்தாலும் சரி, அன்று கறுப்பு கலர் உடைதான் உடுத்திக்கொண்டு போவேன். கறுப்பு நிறத்தை தவிர மற்ற நிற ஆடைகளை உடுத்திக்கொண்டு போகும்போது, ஒன்று, நான் நினைத்துச் சென்ற காரியம் நடக்காது. அல்லது முடிவதற்கு நேரமாகும். இதனால் கூடுமானவரை கறுப்பு கலர் ஆடையையே உடுத்திக்கொண்டு செல்வேன். கல்யாணம் மற்றும் இதர விசேஷ தினங்களுக்கு மட்டும் மற்றவர்கள் மனம் நோகக் கூடாது என்பதற்காகப் பிற நிற ஆடைகளை அணிவேன். கறுப்புதான் எனக்கு ராசியான கலர்.

- எஸ். செல்வசுந்தரி, திருச்சி

# கறுப்புதான்



கோவையில் இப்போது இருப்பது போல் மேம்பாலங்கள் இல்லாத காலம் அது. காந்திபுரம் போகும் வழியில், பரபரப்பான போக்குவரத்துச் சாலையில், ஒரு ரயில்வே கேட் குறுக்கிடும். ஜங்ஷன் அருகில் இருப்பதால், ஒரு நாளில் பலமுறை, இந்த கேட் மூடித் திறக்கப்படும். நாங்கள் துணியெடுக்கவோ, மற்ற சாமான்கள் வாங்கவோ காந்திபுரம் போகும்போது, கேட் திறந்திருந்தால், நினைத்தபடி பொருட்களை வாங்கிக் கொண்டு சந்தோஷமாகத் திரும்புவோம். கேட் மூடியிருந்து, காத்திருந்து, திறந்தபின் போனால், அன்று முழுவதும் அலைந்தாலும், மனத்துக்குப் பிடித்ததாக அமையாமல், எதையும் வாங்காமலே திரும்புவோம். பலமுறை இதை என் அனுபவத்தில் கண்டதால், கேட் மூடி இருந்தால் காந்திபுரம் போகாமல் திரும்பிவிடுவோம்.

- என்.ரங்கநாயகி, கோவை

தூத்துக்குடியில் தனியார் நிறுவனமொன்றில் எனக்கு முதன்முதலாக வேலை கிடைத்தது. அப்போதெல்லாம் எங்கள் ஊரான போடிநாயக்கனூரிலிருந்து, தூத்துக்குடிக்கு நேரடியாகப் பேருந்து கிடையாது. திண்டுக்கல் போய் அங்கிருந்து தூத்துக்குடிக்குச் செல்ல வேண்டும். ''முதன் முதலா வேலைக்குப் போறப்பா... ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆச்சுன்னா என்னால தாங்க முடியாது. நீயோ ரெண்டு பஸ் மாறிப் போகணும். அதனால வீட்டைவிட்டு வெளியே கிளம்புற ஒவ்வொரு தடவையும் 'பிஸ்மில்லாஹி தவக்கல்த்து' (இறைவனின் திருநாமத்தைக் கொண்டு இறைவனின் துணையுடன் ஆரம்பம் செய்கிறேன்) என்று மூன்று முறை ஓதிவிட்டு வெளியே போப்பா'' என்று என் அம்மா சொன்னார்கள். அவர் அன்று (1969-ஆம் வருடம்) சொன்னதை இன்று வரையிலும் அப்படியே கடைபிடித்து வருகிறேன். இதுவரை ஒரு சின்ன அசம்பாவிதம் கூட



# சென்டிமென்ட் கலரு!

வாசகர்களே! உங்களோட சென்டிமென்ட்! குடும்ப நம்பிக்கைகள் என்ன? எழுதுங்க... kalki@kalkiweekly -க்கும் அனுப்புங்க.

நடந்தது கிடையாது. எனக்குத் திருமணம் ஆனதும் இந்தத் திருநாமத்தை என் மனைவியிடமும் கூற, இப்போது 'பிஸ்மில்லாஹி தவக்கல்த்து' எங்களது குடும்ப சென்ட்டிமெண்ட் வார்த்தையாகிவிட்டது.

- எஸ்.சையது முகமது,
போடி



ஞாநி

# நமக்கு நாமே திட்டம்?

கலைஞர் காப்பீட்டுத் திட்டம். கலைஞர் வீட்டு வசதித் திட்டம். கலைஞர் மாளிகை... என்று அரசுத் திட்டங்களுக்குத் தம் பெயரையே சூட்டிக் கொள்கிறார் கலைஞர் கருணாநிதி



தமிழ்நாட்டில் நிலவும் விசித்திரமான சமூக, அரசியல், பத்திரிகைச் சூழல் என் 'ஓ'பக்கங்கள் பகுதிக்கு இதழியல் வரலாற்றில் இடம் தேடிக் கொடுத்திருக்கிறது. ஓர் எழுத்தாளரின் 'பத்தி' தொடர்ந்து வெவ்வேறு பத்திரிகைகளில் வருடக்கணக்காக வெளியாவது இதுவே முதல் முறை. கடந்த ஏழாண்டுகளில் இரண்டு பத்திரி கைகளில் இடம் மாறி இப்போது மூன்றாவதாக 'கல்கி' இதழுக்கு வந்திருக்கிறது. காரணங்கள் விமர்சனங்களைச் சகிக்காத அரசியல் சூழலும், கருத்துச் சுதந்திரத்தைவிட வணிகத்தை முதன்மைப்படுத்துகிற பத்திரிகைச் சூழலும் தான்.

கல்கி இதழில் நான் எழுதும் முதல் தொடர் பகுதி இதுவேயாகும். என்னுடைய இரண்டு சிறுகதைகள் எழுபதுகளில் கல்கியில் வெளிவந்திருக்கின்றன. அதில் ஒரு கதை 'டெலிவிஷன்'. நேரடி ஒளிபரப்பில் பங்கேற்கும் ஒரு வேலையற்ற பட்டதாரி இளைஞன், யாரும் எதிர்பாராதபோது லஞ்சம் ஊழல் பற்றிப் பகிரங்கமாகப் பேசி எல்லாரையும் அதிர்ச்சிக்குள்ளாக்குவதைப் பற்றிய கதை. இது வெளியானதும்

அப்போது தூர்தர்ஷனில் நேரடி ஒளிபரப்புகளைத் தற்காலிகமாக நிறுத்திவிட்டார்கள். வெவ்வேறு தேர்தல் சமயங்களில் சிறப்பு நிருபராக கல்கி சார்பில் சென்று தொகுதி நிலவரங்கள் பற்றி சில கட்டுரைகள் எழுதியிருக்கிறேன். 1978இல் நாங்கள் பரீக்ஷா நாடகக் குழு தொடங்கியபோது, முதல் நாடகம் பற்றி எழுதிய ஒரே வார இதழ் 'கல்கி'தான்.

லஞ்சம் ஊழல் இல்லாத நேர்மையான அரசு நிர்வாகம் வேண்டும்; சக மனிதர்களிடம் அன்பும் சமத்துவமும் பேணும் வாழ்க்கை நெறி குழந்தையிலிருந்தே ஊட்டுவிக்கப்படவேண்டும்; ஆபாசமும் வக்கிரமும் வன்முறையும் ஆதிக்கம் செலுத்தாத கலை இலக்கியச் சூழல் வேண்டும்... என்ற பார்வைகள்தான் நானும் 'கல்கி' இதழும் சந்திக்கும் புள்ளிகள். என்னை 'ஓ' போடவைக்கும் ஆச்சரியமான, அதிர்ச்சியான, அவலமான, அக்கறைக்குரிய விஷயங்களைப் பற்றி இங்கே வாசகர்களுடன் பகிர்வதே இந்தப் பகுதியின் நோக்கம். பல விஷயங்களைப் பற்றி நம் கருத்து உடன்படலாம்; மாறுபடலாம். ஆனால் எல்லாவற்றைப் பற்றியும் விவாதிப்பதற்கும் சிந்திப்பதற்குமான ஒரு கருத்துச் சுதந்திரச் சூழல் தேவை என்பதே நம்மை இணைக்கும் ஒற்றைப் பார்வை.

# ஓ பக்கங்கள்

ஜெயலலிதா திருமதியா? இல்லையா? என்பதற்கும் தி.மு.க. மைனாரிட்டி அரசு என்பதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்?

**பொ**துவாக நடிகர்களுக்குக் கூச்சம் இருக்கக்கூடாது என்பது நடிப்பின் தேவைகளில் ஒன்று. எந்தப் பாத்திரத்தையும் ஏற்று நடிக்க அப்போதுதான் முடியும். முதலமைச்சர் கலைஞர் கருணாநிதி, வசனகர்த்தாவாக நாடகத்திலும் சினிமாவிலும் பெயர் வாங்கியவர்; நடிகராக அல்ல. ஆரம்ப நாட்களில் ஒரு சில நாடகங்களில் நடித்திருக்கிறார். அப்போதுதான் அவருக்குக் கூச்சம் விட்டுப் போயிருக்க வேண்டும்.

இன்று தமிழ்நாட்டில் எதைப் பற்றியும் எந்தக் கூச்சமும் இல்லாத அரசியல்வாதிகளில் முதன்மையானவர் அவர் ஒருவர்தான்.

அரசு திட்டங்களுக்கும் கட்டடங்களுக்கும் தலைவர்களின் பெயர் சூட்டும் வழக்கம் அங்கொன்றும் இங்கொன்றுமாக அபூர்வமாக இருந்ததை, எழுபதுகளில் தாம் ஆட்சிக்கு வந்தபிறகு மிகப்பெரிய அளவில் விரிவுபடுத்தியவர் கலைஞர் கருணாநிதி.

இதற்கு முன்பெல்லாம் அரசு



திட்டங்களுக்கு பெரியார், அண்ணா பெயரையோ அஞ்சுகம் அம்மையார் பெயரையோ முத்துவேலர், முத்துலட்சுமி பெயர்களையோ சூட்டிக்கொண்டிருந்தவர், இப்போதெல்லாம் தம் பெயரையே சூட்டிக் கொண்டிருக்கிறார். கலைஞர் காப்பீட்டு திட்டம், கலைஞர் வீட்டு வசதி திட்டம், கலைஞர் மாளிகை என்று பெயர்கள் சூட்டப்படுகின்றன.

## இந்த வார ஏமாற்றம்!



மத்திய அமைச்சர் அழகிரி, நாடாளுமன்றத்தில் தமிழில் பேச அனுமதி கிடைக்கும்வரை பேசாமல் இருந்த விரதத்தை முறித்து ஆங்கிலத்தில் எழுதி வைத்துப் படித்தது இ.வா.வருத்தம். எம்.பி.கள் தமிழில் பேசலாம். அது மொழிபெயர்க்கப்படும்; ஆனால் அமைச்சர் பேசக் கூடாது என்ற விசித்திரமான விதி அழகிரியால் தவிடுபொடியாகும் என்று எதிர்பார்த்து ஏமாந்தேன்.

அரசாங்கத்தின் ராணி மேரி மகளிர் கல்லூரியில் புதிய கட்டடத்துக்குத் தம் பெயரைச் சூட்டிவிட்டு தானே அதைத் திறந்தும் வைத்திருக்கிறார். ஒப்புக்காக அதைத் திறக்கப் பேராசிரியர் அன்பழகனாரைக் கூட அழைக்கவில்லை. இன்னும் பாக்கியிருப்பது தமக்கான சிலை, தம் உருவப்படம், தம் பெயரில் அருங்காட்சியகம்... இவற்றையும் அவரே திறந்து வைப்பதுதான்.

பதினெட்டு வயதில் பத்தாவது வகுப்புப் படிப்பு மட்டும் முடித்துவிட்டு அரசுப் பணியில் சேர்ந்து முப்பத்தேழு வருடப் பணிக்குப் பிறகு ஐ.ஏ.எஸ். அதிகாரியாக உயர்வு பெற்றிருக்கும் முனுசாமிக்கு இ.வா.பூ.

## இந்த வாரப் பூச்செண்டு!

கலைஞர் பெயர் சூட்டப்பட்ட வீட்டு வசதி திட்டம், மத்திய அரசின் நிதி உதவியுடன் நடக்கிறது என்று கூட்டணியை 'வலி'க்கச் செய்யும் ஒரு பேச்சை ஈ.வி.கே. எஸ். இளங்கோவன் பேசியதும், அதற்கு கருணாநிதி ஒரு விரிவான பதில் அறிக்கை வெளியிட்டார். கலைஞர் வீட்டு வசதி திட்டம் முழுக்க மாநில நிதியில் நடக்கிறது. மத்திய அரசின் இந்திரா காந்தி திட்டத்துடன் அதை இளங்கோவன் குழப்பிக்கொண்டு விட்டார் என்பதுதான் அறிக்கையின் சாராம்சம். ஆனால் மாநில அரசு நிதியில் நடப்பதால், அதற்கு தம் பெயரை ஏன் சூட்ட வேண்டும் என்பது பற்றி பதிலே கிடையாது.

இதில் இன்னொரு பிரச்னை என்னவென்றால் கலைஞர் என்பதை தம் பெயர் என்று கலைஞர் கருணாநிதியே நம்பத் தொடங்கிவிட்டார் என்பதுதான். அதனால் தான் ஜெயலலிதா தன்னைக் கருணாநிதி என்று குறிப்பிட்டுப் பேசுவதைக் கண்டித்து ஒரு பொதுக் கூட்டத்தில் பொரிந்து தள்ளியிருக்கிறார். 'என் வயது என்ன, உன் வயது என்ன' என்றெல்லாம் ஏகவசனம் வேறு. கூடவே 'நான் வயதில் பெரியவன் என்பதால் உன்னைக் குழந்தையிலிருந்தே எனக்குத் தெரியும் என்பதால் ஏகவசனத்தில் கூப்பிடும் உரிமை எனக்கு உண்டு' என்று சமாதானம்

## இந்த வாரத் திட்டு!



காமன்வெல்த் விளையாட்டுப் போட்டி ஏற்பாடுகளில் பெரும் ஊழல்கள் நடப்பது அம்பலமாகித் தமக்கு நெருக்கமான அதிகாரிகள் சிக்கிய பிறகும், தார்மிகப் பொறுப்பேற்று பதவியிலிருந்து விலகாமல் அடம்பிடிக்கும் மத்திய அமைச்சர் சுரேஷ் கல்மாதிக்கு இ.வா.தி.

## இந்த வார மகிழ்ச்சி

ஒவ்வொரு வருடமும் ஈரோடு புத்தகத் திருவிழாவில் பள்ளி மாணவர்களுக்கு உண்டியல்கள் தருகிறார்கள். அதில் அடுத்த வருடம் வரை சேமித்து வைத்த தொகையுடன் உண்டியலை அடுத்தப் புத்தகத் திருவிழாவுக்குக் கொண்டு வந்தால் சலுகைகள் தருகிறார்கள். அப்படி இந்த வருடம் சுமார் ஆறாயிரம் உண்டியல்கள் திரும்பி வந்திருக்கின்றன என்று அமைப்பாளர் எழுத்தாளர் ஸ்டாலின் குணசேகரன் தெரிவித்ததுதான் இ.வா.ம.



வேறு.

ஒருவரை அவர் பெயர் சொல்லி அழைப்பது தவறு என்ற விசித்திரமான பண்பாடு தமிழக அரசியலில் மட்டும்தான் இருக்கிறது. இதில் இடதுசாரிக் கட்சிகளைத் தவிர மீதி எல்லா கட்சிகளும் தங்கள் தலைவர்களுக்கு அடைமொழி சூட்டும் கலாசாரத்தில் விழுந்திருக்கின்றன.

தமிழ்நாட்டுக்கு வெளியே பத்திரிகையாளர்கள் பிரதமரை 'மிஸ்டர் மன்மோகன் சிங்' என்றோ மிஸ்டர் ப்ரைம் மினிஸ்டர் என்றோ முகத்துக்கு நேரே கூப்பிடுகிறார்கள். இங்கே அப்படிப் பேசினால் உதை விழும். அலுவலகத்துக்கு ஃபோன் செய்து நிருபரைப் பற்றிப் புகார் செய்வார்கள்.

ஜெயலலிதா தம்மைக் கருணாநிதி என்று அழைப்பது பண்பாட்டுக் குறைவு என்று அறிக்கை விடுத்திருக்கும் இதே கருணாநிதி தான், தொடர்ந்து நம் ஆட்சியை மைனாரிட்டி தி.மு.க அரசு என்று ஜெயலலிதா பேசினால், அவரை திருமதி ஜெயலலிதா என்று அழைப்பேன் என்று பண்பாடு பொங்கித் ததும்பும் ஓர் எச்சரிக்கையை வெளியிட்டார். ஜெயலலிதா திருமதியா இல்லையா என்பதற்கும் தி.மு.க. மைனாரிட்டி அரசா இல்லையா என்பதற்கும் என்ன தொடர்பு இருக்க முடியும்?

உலகத்தில் எந்த நாட்டிலும் இங்குள்ளது போல அரசியல்வாதிகளின் பெயர் சூட்டும் கலாசாரம் இல்லை. மிகப் பெரும் தலைவர்களின் பெயர்களை விமான நிலையத்துக்கோ நூலகத்துக்கோ சூட்டும் போதுகூட அவர் இறந்த பிறகே சூட்டுகிறார்கள். சிலைகள் வைப்பதும் அப்படித்தான்.

ஜாதிச் சண்டைகள் வருகின்றன என்பதற்காக அரசுப் போக்குவரத்துக் கழகங்கள், மாவட்டங்கள் பெயர்களில் இருந்த தலைவர்கள் பெயர்களையெல்லாம் நீக்கி உத்தரவிட்டவர் கலைஞர் கருணாநிதி. தம் நெஞ்சறிவது பொய்யற்க என்ற கூச்சம் இன்னும் கொஞ்சமேனும் அவருக்கு மீதம் இருக்குமானால், உடனடியாக அரசு திட்டங்கள், கட்டடங்கள் பெயர்களிலிருந்து தம் பெயரை நீக்க அவர் உத்தரவிட முன்வரவேண்டும். இல்லாவிட்டாலும் பின்னாளில் ஆட்சி கைமாறும்போது, இந்தப் பெயர்களெல்லாம் அடுத்த ஆட்சியாளரால் நீக்கப்படும் என்ற உண்மையாவது அவருக்கு உறைக்க வேண்டும்.

இன்னும் நூறு வருடம் கழித்து வரும் தமிழ்க் குழந்தைகள் இப்படித் தம் பெயரை தாமே சூட்டி மகிழ்ந்த தலைவர்கள் பற்றி என்ன நினைப்பார்கள் என்று தயவுசெய்து கற்பனை செய்து பாருங்கள். கூச்சமாக இருக்கும். ●

## இந்த வாரக் கேள்வி!

பிரணாப் முகர்ஜிக்கு செல்ஃபோனில் தேவையற்ற அழைப்பு வந்ததும் அவற்றை நிறுத்த உத்தரவிடும் அமைச்சர் ராசாவுக்கு, இதுவரை இது பற்றி வாடிக்கையாளர்கள் பலர் பல முறை புகார் செய்ததும் புலம்பியதும் தெரியவே தெரியாதா?



குளிர்சாதன வசதி பொருத்தப்பட்ட ஆம்புலன்ஸ் உள்ளே என்னென்ன வசதிகள் இருக்கின்றன என்று ஆர்வத்தோடு விசாரித்தோம்.

''உயிர் காக்கும் மருந்துகள், ஆக்சிஜன் சிலிண்டர், நெபுலைஸர் எனப்படும் சுவாசத்துக்கும் உதவும் கருவி, சர்க்கரை அளவு கண்டறியும் க்ளுக்கோ மீட்டர், இரத்த அழுத்தத்தைக் காண உதவும் டிஜிட்டல் கருவி இவற்றுடன் கொலஸ்சிபள், ஸ்பைன் போர்டு ஸ்கூப் போர்டு, வீல் சேர் என நான்கு விதமான ஸ்ட்ரெச்சர்கள் இருக்கின்றன. மனித நேயத்துடன் பணியாற்றும் ஆம்புலன்ஸ் ஓட்டுநர், அவசர கால உயிர் காக்கும் அடிப்படை மருத்துவப் பயிற்சி பெற்ற ஒருவர் என இரண்டு நபர்கள் இருப்பது தெம்பளிக்கக்கூடிய விஷயம்.


கண்ணன்

''108க்கு ஃபோன் செய்வது மட்டுமல்ல ஆம்புலன்ஸ் வந்து போவதற்கும் இலவசமே. சென்னை கால் சென்டர், ஒவ்வொரு ஆம்புலன்ஸுக்கும் டீசல் கார்டு தந்துள்ளது. அதைப் பயன்படுத்தி பெட்ரோல் பங்க்குகளில் டீசல், ஆயில், வேஸ்ட் காட்டன்... என வாங்கிக் கொள்ளலாம். எந்த இடத்திலும் பணம் தேவைப்படுவது இல்லை. எனவே, 108 ஆம்புலன்ஸ் சேவைப் பணியாளர்கள், பொதுமக்களிடம் செய்த வேலைக்குப் பணம் பெற்றுக்கொண்டால், இது குறித்து உடனே 108க்குத் தகவல் தரலாம். 108 சென்னை கால் சென்டர் உடனடி நடவடிக்கை எடுக்கும்!'' என்கிறார் திருச்சி - பெரம்பலூர் மாவட்டங்களின் மாவட்ட செயல் அலுவலர் கண்ணன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு




# என்ன இருக்கு... ஆம்புலன்ஸ் உள்ளே!?





அருள்வாக்கு

# தேக ஆரோக்கியம்!



மனஸு கொஞ்சம் தெளிந்து சிறிது தெய்வ சிந்தனை செய்வதற்கும் தியானிப்பதற்குங்கூட சில நிமிஷம் ப்ராணாயாமம் (மூச்சடக்கல்) செய்யும்படி சாஸ்திரம் சொல்கிறது. இது யோகத்தின் அங்கம்தான். ஆனால், இதற்கும் மேலே இதில் தீவிரமாக ஈடுபடும்போது ஜாக்ரதை தேவை. முறைப்படி பண்ணாவிட்டால் அல்லது ஸாதகன் இருக்கிற ஸ்திதிக்கு 'ஓவரா'கப் போய்விட்டால், மூளைக் கொதிப்பு, ஏன், மூளைக் கலக்கங்கூட உண்டாய்விடும்; தேஹத்தையும் மனஸையும் ஆரோக்யமாகவும் சுத்தமாகவும் ஆக்கிக்கொள்ளவே ஏற்பட்ட அப்யாஸத்தால் இரண்டுக்கும் ஹானியே உண்டாய்விடும்.

தேக ஆரோக்கியத்துக்கு என்று அநேக யோகாஸனங்கள் இருக்கின்றன. இவற்றிலும் கொஞ்சம் ஜாக்ரதை தேவைதான் என்றாலும் மற்ற யோக ஸாதனைகளைப் போல இதில் கஷ்டமோ, 'ஆபத்து'க்கான ஹேதுவோ அவ்வளவு அதிகமாக இல்லை. சில காலமாக ஸ்கூல்களிலேயே இவற்றைச் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்றும் ஒரு பேச்சு அடிபடுகிறது. கையை, காலை, உடம்பை, நுட்பமாக வளைத்துப் பண்ணவேண்டிய அப்யாஸத்தை அத்தனை குழந்தைகளுக்கும் கவனமாகச் சொல்லிக் கொடுப்பதற்குப் போதிய ஆசிரியர்கள் இருக்க வேண்டும். அதுவுமில்லாமல் யோகாசனம் போடுவதற்கென்று ஒரு காலம் உண்டு. அப்போது வயிற்றிலே ஆஹாரம் இருக்கப்படாது என்று விதி. இவற்றை மீறினால் ஆரோக்யத்துக்குப் பதில் அநாரோக்யந்தான் வரும். ஆகையால் அதற்கான கட்டுத்திட்டம் குலையாமல் கற்றுக் கொடுக்க முடியுமா என்று நிச்சயப்படுத்திக் கொண்டு 'மாஸ் - ஸ்கேலி'ல் ஸ்கூல்களில் சொல்லிக் கொடுக்கலாம். நம்முடைய குழந்தைகள் நல்ல தேஹ திடத்துடன் இருப்பதற்காக எப்படியும் யோகாசனத்தை வ்ருத்தி செய்யத்தான் வேண்டும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



■ சின்னராஜ்



“‘தசாவதாரம்’ படத்துல கமல் பேசுற டயலாக் ஒண்ணும் வரும்: பட்டாம்பூச்சி பறக்கற துக்கும் பூகம்பம் வர்றதுக்கும் ஏதோ ஒரு வகையில தொடர்பு இருக்கும். அதே மாதிரிதான் மனுஷன் உயிர் வாழறதுக்கு பூமியில இருக்கற மற்ற

# தூரிகையே சிறகாக...

உயிரினங்கள் ஏதோ ஒரு வகையில் காரணமா இருக்கு. இன்னொரு வினோதம், மனிதன் இல்லாமல் மற்ற உயிரினங்கள் வாழ்ந்துடும். ஆனா, மற்ற உயிரினங்களின் உதவியில்லாமல் மனிதனால் நீண்ட நாட்கள் வாழ முடியாது. அதனால் பல்லுயிர்ப் பெருக்கம் இப்போதைய காலகட்டத்தின் முக்கிய தேவை. அதை உணர்த்தும் விதத்தில் என் தூரிகை இயங்கிக் கொண்டிருக்கிறது. உணவு சுழற்சியில், பல்லுயிர்ப் பெருக்கத்தில் முக்கியப் பங்கு பறவை இனங்களுக்கு உண்டு. பறவையும் மனிதனும் வேறுவேறல்ல என்பதையும் நான் என் தூரிகை மூலம் உணர்த்தி வருகிறேன்'' என்கிற சின்னராஜ், மேட்டுப் பாளையம் (கல்லார்) சச்சிதானந்த ஜோதி நிகேதன் பள்ளியின் கலை ஆசிரியர் ஓவியம், புகைப்படம், குறும்படம், பறவைகளைக் கவனித்தல்... போன்றவற்றின் மூலம் மாணவர்களிடையே இயற்கையின் நேசிப்பை விதைத்து வருகிறார்.

- மகிமைராஜன்





மொபைலை எடுத்துப் பார்த்தாள் மனோகரி. டிஸ்ப்ளேயில் 'அப்பா' என்பது தெரிந்தது. சந்தோஷத்துடன் பேசினாள்.

''அப்பா... எப்படிப்பா இருக்கீங்க? வீட்டில் எல்லாரும் சௌக்யமா அப்பா...?''

''எல்லாரும் சௌக்கியந்தான் அம்மா. நீ எங்கே இருக்கே...?''

''நான் ஆஃபீஸ்லேதான் அப்பா இருக்கேன்..''

''சரி, நீ உன் அப்பா கிட்டே பேசு.. நான் அப்புறமா வர்றேன்...'' என்று சொல்லிவிட்டு லெட்சுமி எழுந்து சென்றாள்.

''உன்கிட்டே கொஞ்சம் பேசணும் அம்மா... ஆபீஸ்லே லேடீஸ் ரூம் இருக்குதில்லே?''

''இருக்கு அப்பா...''

''அங்கே வாயேன்.''

''சரியப்பா...'' என்று எழுந்து லேடீஸ் ரூமுக்குச் சென்றாள். ஃபேனைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.



மெல்லினத் தொடர்கதை

18

# உள்ளும் புறமும்

வண்ணநிலவன்



''சொல்லுங்கப்பா...''

''மனோகர் எல்லாம் சொன்னாம்மா... மாப்பிள்ளையோட உனக்கு என்ன மனஸ்தாபம் அம்மா...?''

''சொல்லிட்டானா? யார்கிட்டேயும் சொல்ல வேண்டாம்னு சொல்லியிருந்தேன்...'' என்று சொல்லிவிட்டு அமைதியாக இருந்தாள். மீண்டும் சம்பந்தம் கேட்டதும் மனோகரி அழுது விட்டாள். அவள் கேவிக் கேவி அழுவது சம்பந்தத்துக்குப் ஃபோனில் தெளிவாகக் கேட்டது.

''அழாதேம்மா... அழாதே.. ஆஃபிஸ்லே யாராவது பார்த்துரப் போறாங்க... இப்போ ஃபோனைக் கட் பண்ணிடறேன். அப்புறமா நான் பேசறேன்... அழாதே... கண்ணைத் தொடச்சுக்கோ...'' என்று சொல்லிவிட்டு, ஃபோனை கட் பண்ணிவிட்டார் சம்பந்தம். லேடீஸ் ரூமில் தனியே உட்கார்ந்து சிறிது நேரம் அழுதாள். பிறகு அவளாகவே மனது தேறி, வாஷ்பேசினில் முகத்தை அலம்பிக்கொண்டு தன் ஸீட்டுக்குப் போனாள். கண்ணாடி தம்ளரில் இருந்த தண்ணீரை எடுத்துக் குடித்தாள்.

மூன்று எஸ்டிமேட்கள் தயார் செய்ய வேண்டியிருந்தது. வேலை செய்கிற மனநிலையே இல்லை. லீவு போட்டுவிட்டு, வீட்டுக்குப் போய் விடலாமா என்று நினைத்தாள். வீட்டுக்குப் போனால் வெறுமைதான் மிஞ்சும் என்று தோன்றியது. மாமாவும் அத்தையும் ஆளுக்கொரு மூலையில் இருப்பார்கள். இன்று காலையில்கூட அத்தை, அவளுக்கும் கிருஷ்ணபாரதிக்கும் நடுவில் என்ன தகராறு என்று கேட்டாள். அவளுக்குத் தெரியாமல் இராது. என்றாலும் அந்தப் பேச்சை ஆரம்பிப்பதற்காகக் கேட்டாள் என்றுதான் அவளுக்குத் தோன்றியது. ''உங்க மகன்கிட்டேயே கேட்டுக்கிடுங்க...'' என்று சொல்லிவிட்டாள். சொன்ன பிறகு அப்படி வெடுக்கென்று பேசியிருக்க வேண்டியதில்லையோ என்று நினைத்தாள்.

மாமாவுக்கும் அரசல்புரசலாக எல்லாம் தெரியும்தான். ஆனால், மாமா யாரிடமும் அவ்வளவாகப் பேசுகிறவர் இல்லை. எதிலும் தலையிட மாட்டார். நடக்கிறபடி நடந்துவிட்டுப் போகட்டும் என்று இருந்து விடுவார் மாமா. அப்பாவுக்கும் தெரிந்து விட்டது. அப்பா என்ன கேட்கப் போகிறார்? இதைத்தான் அவரும் கேட்கப்

போகிறார். கேட்டுவிட்டுச் சமாதானப்படுத்துவார். வீட்டை விட்டுக் கிளம்பி விடாதே என்பார். அப்பா, என்ன சமாதானம் செய்தாலும் அதைக் கேட்கக்கூடாது. கிருஷ்ணபாரதியுடன் இனி வாழ்வதென்பது முடியவே முடியாது. அது தீர்மானமான முடிவு. அதை யாருக்காகவும் மாற்றிக்கொள்ள அவள் தயா



ராக இல்லை. அப்பா ஊருக்கு வர வேண்டாம் என்று சொன்னால் எங்கே போவது? அவளுடைய அலுவலகத்தின் கிளை பம்பாயில்கூட இருக்கிறது. குழந்தைகளை அழைத்துக்கொண்டு பம்பாய் போய் விடுவாள். தன்னந்தனியாகக் குழந்தைகளை வளர்த்துப் படிக்க வைப்பாள். எந்தக் காரணத்தைக் கொண்டும் குழந்தைகளை அவளால் விட்டுப் பிரிய முடியாது.

ஆனால், போவதுதான் போகிறாய் குழந்தைகளை ஏன் அழைத்துக்கொண்டு போகிறாய் என்று அவன் கேட்டால், என்ன சொல்வாள்? கோர்ட்டுக்குப் போக வேண்டியதுதான். இரண்டு குழந்தைகளும் எனக்கு வேண்டும் என்று அவள் கோர்ட்டில் வாதாடுவாள். குழந்தைகளைப் பற்றி அவனுக்கு என்ன தெரியும்? அவனுடைய கதைகளையும் கவிதைகளையும் தவிர அவனுக்கு உலகத்தில் வேறு என்ன தெரியும்?

''என்ன மேடம் நான் வந்தது கூடத் தெரியாமே பைலையே வெறிச்சுப் பார்த்துக்கிட்டு உட்கார்ந்திருக்கீங்க....'' என்ற குரலைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தாள். அவள் எதிரே சிரித்துக்கொண்டு ஸ்ரீதர் உட்கார்ந்திருந்தான்.

'பல்லைக் காட்ட வந்துட்டானா?' என்று மனதுக்குள் திட்டிக்கொண்டாள். ''தலைவலி'' என்று சொல்லிக்கொண்டே நெற்றியைப் பிடித்துக்கொண்டாள்.

''வெயில் அதிகமா இருக்கு... என்கிட்டே தைலம் இருக்கு... எடுத்திட்டு வர்றேன்...'' என்று எழுந்தான்.

''வேண்டாம்... ப்ளீஸ்... கொஞ்ச நேரம் சும்மா இருந்தா சரியாப் போயிடும்...''

''தாண்டவனைக் காஃபி கொண்டு வரச் சொல்லட்டுமா?''

## அழாதேம்மா... அழாத! ஆஃபீஸ்ல யாராவ

என் புருஷன்கூட இப்படியெல்லாம் கேட்டதில்லை. எவன் எவனோ கேட்கிறான் என்று நினைத்துக்கொண்டே, ''ப்ளீஸ் ஸ்ரீதர்... என்னைத் தனியா விட்டுடுங்க...'' என்றாள். ஸ்ரீதர் சிறிது நேரம் நின்றுவிட்டுப் புறப்பட்டான். உண்மையிலேயே அவளுக்குக் காஃபி குடித்தால் தேவலை போலிருந்தது.

பெண்ணுரிமை என்றெல்லாம் சுசீலா முற்போக்காகப் பேசினாலும், சாதாரண மனித இயல்புகளுடன் தான் இருந்தாள். ஆனால், இலக்கிய உலகில் லட்சியம் பேசுகிறவர்கள் மீது ஏற்படும் கவர்ச்சி அவளுக்குக் கிடைத்தது. பொதுவாகவே எழுத்து, சினிமா, அரசியல்... போன்ற துறைகளில் ஈடுபடுகிறவர்களுக்கு ஒரு

இமேஜ் ஏற்பட்டுவிடும். சாதாரண மனிதர்களுக்கு அவர்கள் மீது ஓர் ஆச்சரியம் உண்டாகும். இந்த ஆச்சரியமும் இமேஜும் சுசீலாவின் நட்பு வட்டாரத்திலும் ஏற்பட்டன. அதை அவள் மனம் விரும்பி ரசித்தாள். கொஞ்சம் கர்வமும் பட்டுக்கொண்டாள்.

அலுவலகத்தில் அவளுடைய செக்‌ஷனில் கொஞ்சம் வேலை குறைவுதான். அன்று அலுவலகத்தில் வைத்து மேலும் இரண்டு கவிதைகளை எழுதினாள். வேலை நேரத்தில் கவிதை எழுதுவது தவறு என்றெல்லாம் சுசீலா கருதவில்லை. பிரேமாவுக்கு ஃபோனில் படித்துக் காட்டினாள். பிரேமா வெகுவாகப் பாராட்டினாள். சுசீலா மீது பிரேமாவுக்கு ரொம்ப உயர்ந்த அபிப்பிராயம் இருந்தது. சுசீலா, தலைக்குப் பூவே வைத்துக் கொள்ள மாட்டாள். இதுவே அவளை ஒரு லட்சியப் பெண்ணாகப் பிரேமாவுக்குக் காட்டியது. ஒரு கவிதையை கிருஷ்ணபாரதியின் ஞாயிறு மலர் பதிப்புக்கும், மற்ற இரு கவிதைகளையும் 'செவ்வானம் சிவக்கும்' என்ற இலக்கியப் பத்திரிகைக்கும் அனுப்புவது என்று சுசீலாவும் பிரேமாவும் ஃபோனில் முடிவு செய்தார்கள்.

அன்று மாலை சீக்கிரமே இருவரும் தங்கள் அலுவலகங்களை விட்டுக் கிளம்பி கிருஷ்ணபாரதியின் பத்திரிகை ஆஃபீஸுக்குச் செல்வதென்று முடிவு செய்தார்கள். அந்த வார ஞாயிறு மலரில்தான் பிரேமாவின் கட்டுரையும் வெளிவந்திருந்தது. அதற்காக கிருஷ்ணபாரதியைப் பார்த்து நன்றி சொல்ல விரும்பினாள் பிரேமா.

கிருஷ்ணபாரதியை அன்று காலையிலேயே எடிட்டர் கூப்பிட்டு விட்டிருந்தார். ஞாயிறு மலர் லே-அவுட்டில் இன்னும் கவனம் செலுத்தச் சொன்னார். போட்டோக்கள் தெளிவாக இல்லை என்றார். மதியச் சாப்பாட்டுக்குப் பிறகு எடிட்டோரியல் போர்டு மீட்டிங் நடந்தது. ஞாயிறு மலரை இன்னும் செழுமைப்படுத்த வேண்டும் என்பதை எல்லோருமே சொன்னார்கள். நாலரை மணிக்கு மேல் ரிசப்‌ஷனிலிருந்து அவனுக்கு அழைப்பு வந்தது. சுசீலா வந்திருப்பதாகச் சொன்னபோது, அவன் உடனே எழுந்து சென்று விடவில்லை. அவனுடைய மனமெல்லாம் அடுத்த இஷ்யூவின் மீதே இருந்தது. 'இவள் எதற்கு வேறு வந்து உயிரை வாங்குகிறாள்' என்று நினைத்தான்.

மத்தியானம் ஆஃபீஸ் கேண்டீனில் சரியாகச் சாப்

## பாத்துரப்போறாங்க. நான் அப்புறம் பேசுறேன்.



பிடவில்லை. அவன் மீதுள்ள அர்த்தமற்ற கோபத்தை, அவனுக்கு டிஃபன் எடுத்து வைக்காததன் மூலம் காட்டியிருந்தாள் மனோகரி. அதனால் பசி வேறு எடுத்தது. அடுத்த இதழிலிருந்து சினிமா உலகப் பிரபலங்களின் பேட்டிகளை வெளியிடுவதென்று முடிவு செய்திருந்தான். அதற்காகப் பார்த்தாவின் உதவியைக் கேட்டிருந்தான். ''சமாளிச்சுப்பிடலாம்டா...'' என்று பார்த்தா சொல்லியிருந்தான்.

அரைகுறையாகப் போட்டிருந்த டம்மியை ஒதுக்கி வைத்து விட்டு வரவேற்பறைக்குப் போனான். சுசீலா உட்கார்ந்து கொண்டே வணக்கம் சொன்னாள். பிரேமா சோபாவிலிருந்து எழுந்து நின்று வணக்கம் சொன்னாள்.

''இன்னும் ஒரு ரெண்டு நிமிஷத்திலே வரலேன்னா கெளம்பிடறதுன்னு முடிவு பண்ணியிருந்தேன்...'' என்றாள் சுசீலா.

''வேலை இருந்தது...'' என்றான்.

பிரேமா தனது கட்டுரை வந்ததற்கு நன்றி சொன்னாள். சம்பிரதாயமாகச் சிரித்து வைத்தான். சுசீலா அன்று தான் எழுதிய மூன்று கவிதைகளையும் அவனிடம் கொடுத்துப் படிக்கச் சொன்னாள்.

''மௌனத்தின் நீண்டுதல்கள் என்கிற கவிதை உங்க பத்திரிகைக்கு. மத்த ரெண்டும் இலக்கியப் பத்திரிகைக்கு...'' என்றாள் சுசீலா. கவிதைகளைப் படித்துவிட்டு,

''மூன்றும் ஒரே பாணியில் இருக்கு...'' என்றான்.

''இன்னிக்கு இருந்த ஒரே மூடுலே எழுதின கவிதைகள்... தேறுமா, தேறாதா?''

''தேறும்... தேறும்...'' என்றான்.

''அவ்வளவுதான் வேணும்...'' என்றாள் சுசீலா.

''மகளிர் தினத்தன்னைக்கு மகளிரைப் பற்றி எழுதியாச்சு...'' என்றான்.

''இந்தக் கவிதைகளை அப்படி பிராண்ட் பண்ண முடியாது. பெண்களோட உணர்ச்சிகளைச் சொல்ற கவிதைகள்னு வேணா சொல்லுங்க.''

''எழுத்திலே ஆணோட உணர்ச்சி பெண்ணோட உணர்ச்சின்னு தனித்தனியாவா இருக்குது?''

''அஃப்கோர்ஸ்... ஏன் இல்லை? நிச்சயமா இருக்கு...''

''சரி... விவாதத்தை லீவு நாள்லே வச்சுக்கிடுவோம்...''

''இதுதான் ஆணாதிக்க மனோபாவம்ங்கிறது. உங்களுக்கு ஆர்க்யூ பண்ண முடியலேன்னா பேச்சை மாத்தி ஒத்திப் போடறது. அதுக்கு நாங்க கட்டுப்படணுமா?''

''இல்லே இப்போ எனக்கு வேலை இருக்கு... அதுதான்...''

சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுச் சுசீலாவும், பிரேமாவும் புறப்பட்டார்கள்.

(தொடரும்)

“ஆக்டோபஸ் பத்தி உனக்கு என்ன தெரியும்?”

“கடல்ல ஓடற ஒரே 'பஸ்' அதுதான் சார்!”

-வெ.சீதாராமன்





# கவிதைகள், கதைகள், போட்டி...

## நிறம் மாறும் ஸ்டோட்!

## துளித் துளியாய்...

# கோகுலம்

ஆகஸ்ட் 2010 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!




**பலம்:** கல்வியில் முன்னேற்றம் வரும். ஆரோக்கியம் சீராகும். கடன் பிரச்னை தீரும். தொழிலில் அபிவிருத்தி உண்டாகும்.

**பலவீனம்:** வேலையில் இடமாற்றம்.

**பரிகாரம் :** சிவலிங்க வழிபாடு கீர்த்தி தரும்.




**பலம்:** உடன்பிறப்புகளின் ஆதரவும் உற்சாகமான வார்த்தைகளும். குடும்பத்தில் அமைதி நிலவுதல்.

**பலவீனம்:** வேலைப் பளு அதிகரித்தல், கொடுக்கல் வாங்கலில் சிக்கல்.

**பரிகாரம் :** ராகு/கேதுவை வழிபட்டு வந்தால் சங்கடம் குறையும்.




**பலம் :** சுபகாரியப் பேச்சு வார்த்தை வெற்றியடைதல், வியாபாரத்தில் திருப்தி, கடன் தொல்லை தீருதல். மனபயமும் பதற்றமும் முற்றிலும் நீங்குதல். செலவுகள் கட்டுக்குள் இருத்தல்.

**பலவீனம் :** பணி இடமாற்றம் - வீடு மாற்றல்.

**பரிகாரம்:**

சனி வழிபாடு சாலச் சிறந்தது.




**பலம்:** புதிய சேமிப்பு வருதல், பிள்ளைகளின் கல்வி வளம் பெருகுதல், இல்லறம் இனிதாய் அமைதல். மனை வாங்க சாதகமான வாய்ப்பு. பதவி உயர்வு கட்டாயம் உண்டு.

**பலவீனம்:** நீண்ட தூரப் பயணம்.

**பரிகாரம்:** குரு வழிபாடு மேன்மையைத் தரும்.




**பலம்:** மனசஞ்சலம் விலகும். படிப்பில் நல்ல முன்னேற்றம் உண்டு. புதிய தொழில் துவங்க வாய்ப்பு. பிரிந்திருந்த கணவன்-மனைவி ஒன்று சேரும் காலம்.

**பலவீனம்:** வேலையை விட்டு வேறு வேலைக்கு இடம்பெயர்தல். பூர்வீகச் சொத்து, பாகப் பிரிவினை, வீடு மாற்றலால் அலைச்சல்.

**பரிகாரம்:** சக்தி பூஜை பலம் தரும்.




**பலம் :**சங்கடங்கள் தீரும். வெளியூர்ப் பயணத்தால் ஆதாயம். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும்.

**பலவீனம்:** சுபச்செலவு கூடும்; உறவினர் விலகல் ஏற்படும், இடமாற்றம் ஏற்படும்.

**பரிகாரம்:** ஆஞ்சநேயர் வழிபாடு மன ஆறுதல் தரும்.

## 15.08.2010 முதல் 21.08.2010 வரை

## தஞ்சை பரத்வாஜ்

# நடக்குமென்பார்; நடக்கும்!




**பலம்:** கல்வி வளம் பெருகும். கடன் சுமை தீரும். புண்ணிய ஸ்தலம் செல்வீர். புதிய தொழில் துவங்க சாதகமான சூழல்.

**பலவீனம்:** வியாபாரம் கடும் போட்டியைச் சந்திக்கும்.

**பரிகாரம்:** சனிபகவானுக்குத் தீபம் ஏற்றி வழிபடுங்கள்.




**பலம் :** நீண்ட கால வழக்கு முடிவுக்கு வரும். சுபகாரிய முயற்சி பலனளிக்கும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்பட்டு மனச்சுமை விலகும்.

**பலவீனம் :** இல்லறத்தில் ஊடல் வரும். உறவினர் சிலர் பிரியக்கூடும். வாகனத்தில் செல்கையில் கவனம் தேவை.

**பரிகாரம் :** கேது/ராகுவை வழிபட்டால் தடைகள் விலகும்.




**பலம் :** மேற்படிப்பு நன்றாய் அமையும். இடமாற்றல் பலமானதாக மாறும். தந்தை வழிச் சொத்து வந்து சேரும். பணவரவு கூடும். பதவி உயர்வு வரும்.

**பலவீனம்:** ஆரோக்கியம் குறையும். இடமாற்றம் ஏற்படும். சத்ரு தொல்லை கூடும்.

**பரிகாரம்:** வினைத் தீர்க்கும் விநாயகனை வேண்டிக் கொண்டால் பலன் கிட்டும்.




**பலம்:** படிப்பில் அபரிமிதமான முன்னேற்றமும் பணவரவும் ஏற்படும். புதிய தொழில் துவங்கும் சூழல். வழக்கு வெற்றி அளிக்கும். மனப்பதற்றம் குறையும்.

**பலவீனம்:** ஆரோக்கிய சீர்கேடு வரலாம்.

**பரிகாரம் :** இஷ்டதெய்வம்/ குலதெய்வம் பிரார்த்தனை வளம் கொடுக்கும்.




**பலம் :** பொருள் சேரும். கடன் சுமை தீரும். வியாபாரம் பெருகும். பகைவர்களின் எதிர்ப்பு விலகும். கல்வி, முன்னேற்ற திசையில் நகரும்.

**பலவீனம்:** சொத்து பாகப்பிரிவினையும் கூட்டாளி விலகலும் தவிர்க்க இயலாது.

**பரிகாரம்:** ராகு-கேது மற்றும் சனி வழிபாடு நலம் தரும்.




**பலம்:** கடன் பிரச்னை தீரும். உறவினர் சிக்கல் மறைந்து குடும்பங்கள் ஒன்றிணையும். பணவரவு கூடும். புண்ணியஸ்தலம் செல்ல வாய்ப்பு ஏற்படும்.

**பலவீனம் :** வேலை மாற்றல் ஏற்படும். வாக்கு வாதத்தால் மனக்கசப்பு வரும்.

**பரிகாரம் :** சனிபகவான் வழிபாடு சங்கடம் தீர்க்கும்.

''நான் சென்னையில இத்தனை வருஷமா இருக்கேன். ஆனால், இதுவரைக்கும் எந்தப் பொண்ணையும் பைக்ல பின்னாடி உட்கார வைச்சுச் சுத்தினது இல்லை. நிறைய பேரை இப்படிப் பார்க்கும்போது ஏக்கமாக இருக்கும். இந்த ஏக்கத்தைத் தீர்த்து வைத்தவர் காஜல் அகர்வால்! 'நான் மகான் அல்ல' படத்தில் நிறைய சீனில் அவரை பைக்கில் உட்கார வைச்சுக்கிட்டுச் சென்னையைச் சுற்றி வர்றேன். தமிழ் இன்டஸ்ட்ரியில் ஹீரோயின்கள் பஞ்சம் இருக்கற சூழ்நிலையில் காஜல் தமிழுக்குக் கிடைச்ச கிஃப்ட். படத்துல மிடில் கிளாஸ் பொண்ணா ரொம்ப கேஷுவலா பண்ணியிருக்காங்க'' தன்னுடன் புதுசா ஜோடி சேர்ந்துள்ள காஜலை ஏகத்துக்கும் கொண்டாடுகிறார் கார்த்தி.

**'நான் மகான் அல்ல' கார்த்தி?**

''வீட்ல கார்த்தி எப்படி வர்றானோ அப்படியே ஸ்க்ரீன்லயும். சென்னையில் இருக்கிற எத்தனையோ மிடில் கிளாஸ் மக்களின் கதைதான் 'நான் மகான் அல்ல'. நான் இதுவரை நடிச்ச படங்களில் சென்னையை மையப்படுத்தி நடிக்கிற முதல் படம் இது. 'வெண்ணிலா கபடிக் குழு' சுசீந்தரனா இப்படி வேற ஒரு களத்துல படம் பண்றார்ன்னு எனக்கே ஆச்சரியமா இருந்தது. சுசீந்தரனின் தம்பி வங்கியில கலெக்ஷன் வேலையில இருந்துருக்கார். அவரோட அனுபவங்களை எடுத்துக்கிட்டுப் படம் பண்ணியிருக்கார் சுசி. நான் படத்துல ஜீவான்ங்கிற பேர்ல பேங்க் கலெக்ஷன் ஆளா வர்றேன். நாம வாழ்க்கையில் அடிக்கடி சந்திக்கற கேரக்டர்ல நான் வர்றதால ஆடியன்ஸ் கிட்ட பெரிய அளவு ரீச் ஆவேன்ங்கிற நம்பிக்கையிருக்கு. படத்துல நான் அரைக் கை சட்டைப் போட்டுக்கிட்டு கேஷுவலா வர்றேன். காஜல், சல்வார் கமிஸ் போட்ட நிலவா பளிச்சுனு இருப்பாங்க. சண்டை, டூயட் எல்லாம் இருக்கு. ஆனால், எதுவும் மிகைப்படுத்தல் இல்லாம யதார்த்தமா இருக்கும்.''

**ரஜினி டைட்டிலை வைச்சுக்கிட்டது மூலமா அவர் பாதையில பயணிக்கப் போறீங்களா?**

''ஐய்யையோ, சூப்பர் ஸ்டார் எங்க? நான் எங்க? இந்தக் கதைக்கு 'நான் மகான் அல்ல' டைட்டில் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. இந்த டைட்டிலை கே.பாலசந்தர் வெச்சிருந்தார். எங்களுக்காகக் கேட்டவுடன் ஓ.கே. சொல்லிக் கொடுத்துட்டார் அவ்வளவே.''

**யதார்த்தமான ஹீரோவா அறிமுகமான நீங்க கமர்ஷியல் பாதைக்கு மாறிட்டீங்களே?**

''எப்பவுமே நான் யதார்த்தமான படம் பண்ணிக்கிட்டிருக்க முடியாது. யதார்த்தமான படம் மட்டும்தான் பண்ணணும்னா என்னுடைய கேரியர்ல நான் வெறும் ஆறு படங்கள்தான் பண்ண முடியும். ஆக்ஷன், ஃபேமிலி, காமெடி, ரொமாண்டிக் என எல்லா கதைகளிலும் பொருந்திப் போகக் கூடிய ஹீரோவாக இருக்க ஆசைப்படறேன். இன்டஸ்ட்ரியில் தொடர்ந்து படம் கொடுக்க முயற்சி பண்றேன். அதுக்காக மோசமான கதைக்கு ஓ.கே. சொல்ல மாட்டேன். வித்தியாசமான ஸ்கிரிப்ட் எப்போதோ ஒரு முறை அமையும். அது வரை கண்டிப்பாக வெயிட் பண்ணித்தான் ஆகணும்.''

**வீட்டிலேயே இருக்கக்கூடிய போட்டியைச் (சூர்யா) சமாளிக்க என்ன பண்றீங்க?**

''காஜல்

''கிட்டத்தட்ட இருபத்தைந்து படம் பண்ண அண்ணன் சூர்யா எப்படி எனக்குப் போட்டியாக இருக்க முடியும்? அண்ணனிடம் இருந்து அர்ப்பணிப்பு, ஈடுபாடு, உழைப்பு போன்ற கற்றுக்கொள்ளக்கூடிய விஷயங்கள் நிறைய இருக்கின்றன. போட்டியாக எதுவும் இல்லை.''

**அடுத்த படம் என்ன?**

'' 'சிறுத்தை' பண்றேன். சிங்கத்துக்குப் போட்டியான்னு கேட்காதீங்க. தெலுங்கில் ரவிதேஜா நடிச்சு ஹிட்டான கதையை டைரக்டர் 'சிவா' எடுக்கறார். எல்லார்க்கும் பிடிச்ச ஜனரஞ்சகமான சிறுத்தையா வரும்.''

**கல்யாணம் எப்போ?**

''பொண்ணு பார்த்துக்கிட்டே இருக்காங்க. என்னோட வருங்கால மனைவி நிச்சயம் அப்பா, அம்மா பார்க்கற பொண்ணுதான். பெரியவங்களை மதிக்கற, நம்ம பண்பாட்டை விரும்பற பொண்ணுதான் எங்க ஃபேமிலியோட சாய்ஸ். வேறெந்த எதிர்பார்ப்பும் எனக்குக் கிடையாது.

– ராகவ்குமார்

# அகர்வாலோடு சுற்றினேன்!"

**கார்த்தி பேட்டி**





"போலீஸ் ஜீப்பை ஸ்டார்ட் பண்ணணும்... லாக்கப்பு உள்ளே இருந்து நாலு பேரைத் தள்ளிட்டு வா!"

- போளூர் ஆர்.பஞ்சவர்ணம்

"எம்.எல்.ஏ.க்கள் ஏன் கையில் 'அரிவாளோடு' போறாங்க?"

"சட்டசபையில் 'வெட்டு'த் தீர்மானம் கொண்டு வரப் போறாங் களாம்..."

- பாளை பசும்பொன்



"நம் மன்னர் சரியான கில்லாடின்னு எப்படிச் சொல்றே?"

"அண்டைநாட்டு மன்னர்களி டமிருந்து ஓலை கொண்டு வரும் புறாக்களையெல்லாம் பிடித்து வைத்து, ஒரு புறாப் பண்ணையே உருவாக்கி விட்டாரே!"

- கே.தண்டபாணி





''மன்னா... உங்களது போர்த் திறமையை வைத்து நமது அரச வைப் புலவர் ஒர் ஆற்றுப்படை எழுதியிருக்கிறாராம்...''

''அப்படியா... என்ன தலைப்பு வைத்திருக்கிறார்...?''

''புறமுதுகாற்றுப்படை.''

- 'வானவில்' மூர்த்தி





# சட்டசபையில வெட்டுத் தீர்மானம்!

''சாமி, வாழ்க்கையில் எல்லோரிடமும் சுலப மாக நான் ஏமாந்து போய்விடுகிறேன்!''

'' 'பரிகாரம்'னு என்னைத் தேடி நீ வந்தவுட னேயே, அதை நான் புரிந்துகொண்டு விட்டேன்!''

- அனன்யா



''தாமி, அய்யாவுக்கும் உங்களுக் ம் ஒரே ஒரு வித்தியாசம்தான்.''

''என்ன வித்தியாசம்?''

''அய்யா வைக்கற ரசம் சாம்பார் ாதிரி இருக்கும். நீங்க வைக்கற சாம் ர், ரசம் மாதிரி இருக்கே...''

-மதுரை முருகேசன்

# கவிதை கஃபே

பற்றி எரிகிறது
மூங்கில் காடு
திசையெங்கும்
இசையின் சாம்பல்

- கோ.பாரதிமோகன்

ஒவ்வொரு
ஞாயிற்றுக்கிழமையின்
சாயுங்காலப் பொழுதுக்கு
அப்பால்
கவலைப்பட
ஆரம்பித்து விடுகிறோம்...
குழந்தைகளைப் போல
நாமும்!

- குடந்தை கோ.பாலமுருகன்

வந்த இடத்தில்
பயங்கர சேட்டை
எந்தப் பொருளும் இல்லை
அதனதன் இடத்தில்
இனி நகர்த்த வேண்டியது
வீடு மட்டும்தான்
பொறுமை இழந்த அம்மா
குழந்தையைப் பார்த்து,
"சும்மா இருக்கியா...?
பூச்சாண்டிக்கிட்ட பிடிச்சுக் கொடுக்கவா...?"
என்று அதட்டியதிலிருந்து
'எங்கே...!
பிடித்துக் கொடுத்து விடுவார்களோ...!'
என்று பயந்து நடுங்கி
மூலையில் ஒடுங்கி அமர்ந்திருக்கிறது
பூச்சாண்டி!

- ப.உமாமகேஸ்வரி

வாசகர்களே! உங்க க்யூட் கவிதைகளைச் சீக்கிரமா 'கவிதை கஃபே'க்கு

எந்த வகைப் பறவையென்று
தெரியவில்லை
வழி தெரியாமல் வகுப்பறைக்குள்
வந்துவிட்ட அக்குஞ்சுப் பறவை
சிறகடிக்கத் துவங்கிற்று
ஒவ்வொரு குழந்தையின்
பாடப் புத்தகத்தினுள்ளும்

-க.அம்சப்ரியா

உன்னை நிறுவுகிறது
என் விரல்களுக்குத் தப்பிய
பட்டாம்பூச்சியின் மெல்லிய அமர்வுக்கும்,
தன்னைக் கூப்பிக்கொள்கிற
தொட்டாச்சிணுங்கியின் வெட்கம்!

- கி.சங்கரபாண்டியன்

# ாம்பூச்சியால் டாச்சிணுங்கிக்கு வெட்கம்!

உனது விலாசத்தை
தொலைத்துவிட்டு
விசாரிக்கிறேன்
பறவைகளிடமும்,
பட்டாம்பூச்சிகளிடமும்.
கிடைக்கவில்லையெனில்
புகார் செய்யலாம்
பூக்கள் மீதும், பனித்துளி மீதும்

- வே.விநாயகமூர்த்தி

றிப்பிட்டு அனுப்புங்க... kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

# ஸ்கூட்டிக்கு



● சுருதி

"அம்மா அப்பாவிடம் 'நச்நச்' என்று 'நச்சி', ஆயிரம் ப்ளீஸ்கள் போட்டுக் கெஞ்சிக் கூத்தாடிய பிறகு என் கைக்குக் கிடைத்தது ஸ்கூட்டி. சரியான நேரத்துக்குக் கல்லூரிக்குப் போய்வர, மாலை ஸ்பெஷல் கோச்சிங் வகுப்புகளுக்குச் செல்ல தற்போது எனக்கு இதை விட்டால் வேறு துணையில்லை. நான் பெற்றோரின் சம்மதம் பெற்று இதை வாங்குவதற்குள் போதும்போதுமென்று ஆகி விட்டது.

"நீ முதல்ல டு-வீலர் லைசென்ஸ் வாங்கு. அப்புறம் ஸ்கூட்டி வாங்கித் தருகிறேன்" என்று அப்பா சொல்ல, என்னிடமிருந்த 'டு-வீலர்' லைசென்ஸை உடனே எடுத்துக் காட்டினேன். நெருங்கிய தோழியின் ஸ்கூட்டியில் ஓட்டிப் பழகி லைசென்ஸை வீட்டுக்குத் தெரியாமல் ஏற்கெனவே நான் வாங்கி வைத்திருந்தது தனிக்கதை!



பேருந்துகளின் கூட்ட நெரிசலிலிருந்து விடுதலை. தவிர, பயண நேரத்தையும் பெருமளவு குறைத்த உற்ற நண்பன் இந்த ஸ்கூட்டி! வேலைக்குச் சென்று திரும்பி வரும் அம்மாவை பஸ் ஸ்டாண்டிலிருந்து அழைத்துவர, கடைகளுக்குச் சென்று காய் கறி, பால்... வாங்கி வர சலிக்காமல் உழைக்கும் நண்பன். ஏதாவது காரியத்தை நினைத்துக்கொண்டு இதில் பயணித்தால் வெற்றிமுகம்தான்!

நடிகர் ரஜினி படிக்காதவன் படத்தில் டாக்ஸி டிரைவராக நடிப்பார்; தன் டாக்ஸியுடன் பேசுவார். அதேபோல் நானும், தனியே போகும்போது என் ஸ்கூட்டியைத் தட்டிக்கொடுத்து மானசீகமாக உரையாடுவேன். பிறந்த நாள் கொண்டாடுவது போல் என் ஸ்கூட்டி கைக்குக் கிடைத்த நாளை ஆண்டுதோறும் 'கேக் வெட்டி' நண்பர்களை அழைத்துக் கொண்டாடுகிறேன். ஆயிரம் கிண்டல்களுக்கும், கேலிகளுக்கும் மத்தியில். இது இரண்டாவது ஆண்டு!

**- சுருதி சுந்தர்ராஜன், கோவை**

**உங்க பைக் அனுபவத்தை 'மை பைக்' என்று குறிப்பிட்டு எழுதி அனுப்புங்க. kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்ஃபோனில் KACON என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, உங்கள் அனுபவம், பெயர், ஊர் ஆகியவற்றுடன் 562632 என்ற எண்ணுக்கும் எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.**

அறுபது வருடங்களுக்கு முன் சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொள்ளும்போது கீழே விழுந்து பலத்த அடி படவும் அத்துடன் சைக்கிள் ஓட்டுவது நின்று போனது. இருபது வருடங்களுக்கு முன் திட்ட வட்டார வளர்ச்சி அலுவலராகப் பணியாற்றிய போது சமூகக் காடுகள் விரிவாக்க அலுவலர் தமது டி.வி.எஸ். 50ல் என்னை முகாமுக்கு அழைத்துச் சென்றபோது, அரைமணி நேரம் எனக்குப் போக்குவரத்து இடைஞ்சல் இல்லாத கிராமத்தில் ஓட்டக் கற்றுக் கொடுத்தார். ஆர்வம் மிகுதியில் வேகமாக ஓட்டி ஆலமரத்தில் மோதிய அதிர்ச்சி இன்னும் தீர்ந்தபாடில்லை. அதுவும் நின்று போனது. என் பையனின் பைக்கில் பின்னால் உட்கார்ந்து செல்லும்போதுகூட பைக் அச்சம் என்னை விடுவதில்லை.

எப்படி 'மை பைக்' அனுபவம்!

- அ.சம்பத், கோயம்புத்தூர்

# மை பைக்!

# ஹேப்பி பர்த்டே!

நானும், என் நண்பன் ஸ்ரீராமும் புதிதாக வாங்கிய பைக்கில் முதன்முதலில் நெடுந்தூரப் பயணமாக திருப்பதி-திருமலைக்குச் சென்றோம். மலை மேல் சுவாமி தரிசனம், கீழே தாயார் தரிசனம் எல்லாம் முடிந்து, மாலை திரும்புகையில் ஒரு உணவகத்தில் வண்டியை நிறுத்திவிட்டு, டிஃபன் சாப்பிட்டு இளைப்பாறிவிட்டு வெளியே வந்து வண்டிகளை எடுத்தால், என் நண்பன் வண்டியில் ரியர் வியூ மிர்ரர் திருடப்பட்டுவிட்டது. இரவு வேறு. என்ன செய்வது என்று தெரியவில்லை! நான் முன்னால் மெதுவாகச் செல்ல, என் பின்னால் என் பைக்கின் சிகப்பு விளக்கைப் பார்த்தபடி நூல் பிடித்தாற் போல் என் நண்பன் தொடர்ந்தான். காலையில் இருந்த வேகம் காணாமல் போய்விட்டது. ஒருவழியாக திரும்பி வீடு வந்து சேர்ந்தோம். அந்த மாலைப் பயணத்தை இப்போது நினைத்தாலும் ஒரு பக்கம் பயம் கலந்த திகில்; இன்னொரு பக்கம் மகிழ்ச்சி கலந்த சாதனை த்ரில்!

- பா.ராம்பிரசாத், ஜமீன் பல்லாவரம்



**ரமணன்**

''இன்றைக்கு மற்ற எந்தத் தொழிலையும் விடவும் மிகவும் பாதிக்கப்பட்டிருப்பது நெசவுத் தொழிலின் நூற்பாலைகள்தான். பல ஆலைகள் நஷ்டத்திலோ அல்லது மிகக் குறைந்த லாபத்திலோதான் இயங்கிக்கொண்டிருக்கின்றன. மற்ற தொழிலாளர்களைவிட அதிக ஊதியம் பெறுபவர்கள் நூற்பாலைத் தொழிலாளர்கள். ஆனால், அதிகமான தொழிலாளர் பிரச்னையும் இங்கேதான். மின்வெட்டு, முப்பது சதவிகிதம்தான் என்று அறிவிக்கப்பட்டாலும் உண்மையான மின்வெட்டு ஐம்பது சதவிகிதம். இதனால் நூல் உற்பத்தி பாதிக்கப்பட்டாலும் தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்க வேண்டும். ஏறிக்கொண்டே போகும் டீசலின் விலையினால் ஜெனரேட்டர் இயக்கத்தின் செலவும் மூன்று மடங்கு உயர்ந்திருக்கிறது. அதுமட்டுமில்லை, நல்ல வகை பஞ்சு நேரடியாக ஏற்றுமதி செய்யப்படுவதால், பஞ்சு ஒரே விலையில் கிடைப்பதில்லை. தரமும் வேறுபடுகின்றன. இதனால் நூலின் விற்பனை விலை மாறுபடுகிறது'' என்கிறது நூற்பாலை அதிபர்களின் தரப்பு.




உலக அரங்கில் இந்திய ஜவுளித்துறைக்குப் பருத்தி உற்பத்தியில் இரண்டாவது இடம். சுமார் முந்நூறு லட்சம் பேல்கள் (ஒரு பேல் 170 கிலோ) இந்தியாவில் விளைவிக்கப்படுகின்றன. ஆனாலும் பருத்தி விவசாயிகள் அவலநிலையில்தான் இருக்கிறார்கள். 1997லிருந்து-2007 வரை விளைவித்த பருத்திக்கு ஏற்ற விலை கிடைக்கா

# சிக்கலில்

மல், கந்துவட்டிக் கொடுமையினால் தற்கொலை செய்துகொண்ட பருத்தி விவசாயிகள் ஒரு லட்சத்து எண்பதாயிரம். இது நாடாளுமன்றத்தில் பதிவான செய்தி. ஆனால் இடைத்தரகர்களும் பஞ்சாலை அதிபர்களும் பஞ்சு ஏற்றுமதி செய்து கொள்ளை லாபம் ஈட்டியிருக்கின்றனர்.

பஞ்சாலைகளின் நேரடிப் பஞ்சு ஏற்றுமதியும் நூல் விலையேற்றத்துக்குக் காரணம் என்று சொல்லும் நூற்பாலைகள் செய்தது என்ன தெரியுமா? தரமாகத் தயாரிக்கப்பட்ட நூலை ஏற்றுமதி செய்ததுதான். பெரும் மூலதனத்தில் கட்டமைப்பும், பல லட்சக் கணக்கான தொழிலாளர்களின் வாழ்வாதாரமாகவும் இருக்கும் நெசவுத்தொழிலின் முக்கிய இடுபொருளை, உள்நாட்டுச் சந்தையில் விற்பனை செய்யாமல் ஏற்றுமதி செய்ய கற்றுக் கொடுத்திருக்கிறது அரசின் உலகமயமாதல் கொள்கைகள். இதைவிட அதிர்ச்சியான விஷயம் இந்த நூலை வாங்கும் பங்களாதேஷ், வியட்நாம், பாகிஸ்தான், சீனா போன்ற நாடுகள் சர்வதேச ஜவுளி, ஆயத்த ஆடைகளின் ஏற்றுமதி மார்க்கெட்டில் நமது போட்டியாளர்கள். நமது நூலை வாங்கி அதில் துணி உற்பத்தி செய்து நாம் ஏற்றுமதி செய்துகொண்டிருக்கும் நாடுகளுக்கே குறைந்த விலையில் விற்கிறார்கள். இதற்கு உதவிக்கொண்டிருக்கின்றன நமது ஆலைகள். ஏற்கெனவே உருகி ஓடிக்கொண்டிருக்கும் உலகப் பொருளாதார வீழ்ச்சியில் டாலர் மதிப்பு பதிமூன்று சதவிகிதம் வீழ்ச்சி அடைந்ததால், நமது துணி ஏற்றுமதியாளர்



# நூற்பாலைகள்!

களுக்கு பதிமூன்று சதவிகித வரவு இழப்பு என்பதோடு, வரும்காலத்தில் மார்க்கெட்டை இழக்கும் அபாயமும் இருக்கிறது.

இந்த ஆண்டு இந்தியாவில் வரலாறு காணாத நூல் விலை ஏற்றத்துக்கு முழுக்க முழுக்க காரணம் மத்திய அரசின் ஏற்றுமதிக் கொள்கைகள்தான் என்கிறது மார்க்சிஸ்ட் கட்சியின் அறிக்கை. 2009 செப்டம்பரிலிருந்து நவம்பருக்குள்ளாக ஒரு பேல், ரூபாய் இருபத்தி இரண்டாயிரத்திலிருந்து இருபத்தைந்தாயிரமாக உயர்ந்துவிட்டது. உடனடியாகப் பஞ்சு ஏற்றுமதியை நிறுத்த வேண்டும் எனக் கோவை தென்னிந்திய மில் சங்கம், ஆயத்த ஆடை ஏற்றுமதிக் கழகம், இந்திய ஜவுளிக் கூட்டமைப்பு எல்லாம் மத்திய அரசை வேண்டின.



* தயாநிதி மாறன்

"தொழிலில் ஈடுபட்டுள்ளோர் தேவையில்லாமல் பீதி அடைந்துள்ளனர். நமது நாட்டில் போதுமான பருத்தி உற்பத்தி இருக்கிறது. பருத்தி ஏற்றுமதியைத் தடை செய்ய வேண்டிய அவசியமேயில்லை'' என்று மத்திய ஜவுளித் துறை அமைச்சர் தயாநிதிமாறன் 2009 டிசம்பரில் அறிவிக்கிறார். ஆனால் 2010 ஏப்ரல் மாதத்தில் 'ஜவுளித் துறை உள்நாட்டு நூற்பாலைத் தொழிலுக்கு மூலப்பொருள் பற்றாக்குறையிருப்பதால் ஏற்றுமதிக்குத் தீர்வை விதிக்கப்பட வேண்டும் என்று பரிந்துரைப்பதால் பஞ்சு ஏற்றுமதிக்குத் தீர்வை' என மத்திய நிதி அமைச்சகம் அறிவித்தது. இதைக் கடந்த ஆண்டு நவம்பர் மாதமே செய்திருந்தால் இந்த நூல் விலை உயர்வு வந்தேயிருக்காது என்பது இத் துறையிலிருக்கும் பலரின் ஆதங்கம். ஆனால் இது நிலைமையை முழுவதும் சமாளிக்க உதவாது. இந்த ஆண்டு விளைந்த பஞ்சில் எண்பத்தோரு சதவிகிதம் தான் வெளியே வந்திருக்கிறது. 19 சதவிகிதம் பதுக்கப்பட்டிருக்கிறது. சர்வதேசச் சந்தையில் அடுத்த ஆண்டு வரப்போகும் பஞ்சு பற்றாக்குறையைப் பணமாக்கிக் கொள்ள அகமதாபாத் பஞ்சாலை லாபி திட்டமிட்டிருக்கிறது. அதனால் அடுத்த ஆண்டும் நூல்விலை குறைய வாய்ப்பில்லை என்கிறது ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை.

நெசவுத்தொழில் சார்ந்த சங்கிலித் தொடரான தொழில்களில் ஈடுபட்டுள்ள பருத்தி விவசாயிகள், ஜின்னிங் தொழில் உரிமையாளர்கள், பஞ்சு வர்த்தகர்கள், நூற்பாலை உரிமையாளர்கள், கைத்தறி, விசைத் தறி தொழிலாளர்கள், ஏற்றுமதியாளர்கள் என அனைவரும் சிக்கிய நூல்கண்டாகத் தவிக்க வைக்கும் இந்த நூல் பிரச்னைக்குத் தீர்வுதான் என்ன?

**(ஆலோசனைகள் அடுத்த வாரம்)**



### தமிழ்நாட்டுக் கலைகள் - கைவேலைகள்

**த**மிழகத்தின் கலைத்தொழில் சிறப்புகளை வியப்பும் நேசமும் கலந்து விவரிக்கும் கட்டுரைகளின் தொகுப்பு. பெரும்பாலான கட்டுரைகள், கல்கி தீபாவளி மலர்களின் வண்ணப்பட மடலுக்காக எழுதப்பட்டவை. மீன் பிடித் தொழில் முதல் சுடுமண் சிற்பங்கள் வரை கலவையான விஷயங்கள் அடங்கிய நூல்.

**விலை ரூ.60.00**


* பா.நாகலெட்சுமி


* சுப்ர.பாலன்

**விலை ரூ. 90.00**

மேற்கண்ட இரண்டு புத்தகங்களையும் எழுதிய சுப்ர.பாலன், பொற்றாமரை அமைப்பில் (2010) ஆண்டுக்கான சிறுகதை வேந்தர் விருது பெற்றவர்.

### மாறிவரும் காலங்கள்

**எ**ழுத்தாளர் சுப்ர.பாலனின் மனைவி பா.நாகலெட்சுமி எழுதியிருக்கும் நினைவுச் சித்திர நூல். மனைவி சொல்லச் சொல்ல கணவர் தொகுத்திருந்தாலும் எழுத்தில் பெண்மையின் தனிப் பொலிவு இருக்கிறது. 1940களிலிருந்து இன்றுவரை, தம்மைச் சுற்றியுள்ள சிறு உலகத்தில் நூலாசிரியர் கண்டுள்ள பெரும் மாற்றங்கள் வியப்பும் பிரமிப்பும் இடையிடையே சலிப்பும் கலந்து பதிவுசெய்யப்பட்டுள்ளன.

# ஒப்பனையற்ற எழுத்து!

### வெள்ளம் வந்த பிறகு...

**ய**தார்த்தமும் மென்மையும் இழையோடும் சிறுகதைகளின் தொகுப்பு. கதாபாத்திரங்களின் குணச்சித்திரம், வாழ்க்கை விநோதங்கள், விடையில்லாத கேள்விகள்... என்று ஒவ்வொன்றிலும் ஒருவித சுவாரஸ்யம். ஒப்பனையோ நவீனத் தேடலோ கலக்காத நேரடியான எழுத்து நடையில் சுருக்கமாகப் பேசும் கதைகள்.

**மேற்கண்ட மூன்று நூல்களையும் கங்கை புத்தக நிலையம், (13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை-600 017) வெளியிட்டிருக்கிறது.**

**- மலர்**











### திருமா இது தருமா?

உமாசங்கர் ஐ.ஏ.எஸ். இடைநீக்கத்தைத் தொடர்ந்து தென் மாவட்டங்களில் அவரது இனத்தைச் சேர்ந்தவர்கள் மறியல், ஆர்ப்பாட்டம், உண்ணாவிரதம் என்று கலக்கி வருகிறார்கள். அதேசமயம் தாழ்த்தப்பட்டவர்களில் மற்றொரு பிரிவினர் பெரும்பாலும் வசிக்கும் வட தமிழகத்தில் எந்தச் சலசலப்பும் இல்லை. ''நான் பணியிலிருந்தபோது சமூக முன்னேற்றத்துக்காக திருமாவளவனின் முயற்சிகளை ஆதரித்திருக்கிறேன். தனிப்பட்ட முறையில் தொலைபேசியிலாவது எனக்கு ஆறுதலும் ஆதரவும் தெரிவித்திருக்கலாம்'' என்று வருத்தத்தோடு நண்பர்களிடம் சொல்லுகிறாராம் உமாசங்கர். இந்த நிலையில் மத்திய அரசின் பணியாளர் மற்றும் நிர்வாகத் துறை 'உமாசங்கரை இடை நீக்கம் செய்த தமிழக அரசின் உத்தரவு ஏற்புடையதல்ல' என்று சொல்லிவிட்டதாக ஒரு தகவல்.



### தேவை இலவச யோசனை

இப்போது தி.மு.க.வையும் அ.தி.மு.க.வையும் ஆட்டிப்படைக்கும் கேள்வி, தேர்தல் அறிக்கையில் என்னென்ன இலவசத் திட்டங்களை அறிவிப்பது என்பதுதானாம்! மதுரைப்

# ஆள்பிடிக்கும் அழகிரி!

### சங்கம் காக்கும் சரத்

நடிகர், நடிகைகள் தயாரிப்பாளர்களிடம் முன்பணம் வாங்கிக்கொண்டு வாக்களித்தபடி நடித்துக்கொடுக்காமல் இருந்தாலோ அல்லது தயாரிப்பாளர் நடிகர், நடிகைகளுக்குச் சொன்னபடி சம்பளம் கொடுக்காவிட்டாலோ இடையில் பஞ்சாயத்து செய்து பிரச்னையைத் தீர்க்க உதவுகிறது நடிகர் சங்கம். இப்படிப் பிரச்னையைத் தீர்க்கும்போது பெற்றுத் தரும் பணத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை நடிகர் சங்கத்துக்கு நன்கொடையாகக் கொடுக்க வேண்டும். ''ஒரு காலத்தில் நிதியில்லாமல் திண்டாடிய சங்கம் இப்போது சமாளித்துக்கொண்டு நிற்கிறது. இதற்காக சரத்குமாருக்கு நன்றி சொல்லும் அதே சமயத்தில் சங்கத்தின் வரவு-செலவு கணக்கையும் முறையாகச் சமர்ப்பிக்க வேண்டிய பொறுப்பு நிர்வாகிகளுக்கு உண்டு'' என்கிறார் ஒரு நடிகர். பெரிய நடிகர்கள் அழைத்தால் கூட்டத்துக்கு வருவார்களே தவிர, இதுபோன்ற விஷயங்களைக் கண்டுகொள்வதில்லையாம்.





பகுதியில் ஆளும்கட்சி, தனியார் ஏஜென்ஸி மூலம் வீட்டுக்கு வீடு சர்வே எடுக்கிறதாம். 'எந்த வீட்டு உபயோகப் பொருள் பெரும்பான்மையான வீடுகளில் இல்லை' என்பதை கண்டறிய சர்வேயாம். சர்வே முடிவுப்படி இலவசம் அறிவிக்கப்படுமாம். அதே சமயம் ஜெயலலிதா, 'மடிக்கணினி' இலவசமாகக் கொடுப்பதாக இருக்கிறாராம்.

## எது 'மேல்' என்று சொல்லப்பா



மேல் சபையைக் கொண்டு வரும் வேலை அவசரம் அவசரமாக நடந்து வருகிறது அல்லவா?! இது தொடர்பாக இப்போது ஆளும்கட்சியில் மற்றொரு கருத்து உருவாகியிருப்பதாகச் சொல்லுகிறார் கள். ''மேல்சபை உறுப்பினராக பல ஊர்களிலிருந்து பலமான போட்டி இருக்கும்; ஆனால் ஜாதி செல்வாக்கு, கட்சிப் பிடிப்பு ஆகியவைப் பார்த்துக் கொடுத்தாலும் கிடைக்காதவர்கள் அதிருப்தியாளர்கள் ஆகிவிடுவார்கள். தேர்தல் நெருங்கும் சமயத்தில் இதுபோன்ற நிலை உருவாகி விடலாமா?'' என்று தி.மு.க. மேலிடம் யோசிக்கிறதாம். தவிர, தேர்தலில் எப்படிப்பட்ட கூட்டணி உருவாகும் என்று தெரியாமல் 'இப்போதிருக்கும் கூட்டணிக் கட்சிகளுக்கு மேலவையில் இடங்களைப் பங்கிட வேண்டாமே' என்ற தயக் கமும் இருக்கிறதாம். தேர்தலுக்குப் பிறகு, பார்த்துக் கொள்ளலாமா என்று யோசிக்கிறார்களாம்.





## அழகிரி திறக்கும் வடக்கு வாசல்

வரும் தேர்தலுக்குப் பிறகு குடும்ப அரசியலில் ஓர் அசைக்க முடியாத இடத்தைப் பெற வேண்டுமானால் கட்சியின் பெரும்பாலான எம்.எல்.ஏ.க்களின் ஆதரவு இருக்க வேண்டும் என்ற நோக்கில் தமது ஆதரவு தளத்தை வடதமிழ்நாட்டிலும் உருவாக்குகிறாராம் அழகிரி. அந்த வகையில் தாம்பரம் எம்.எல்.ஏ. ராஜா, அழகிரி ஆதரவாளராக மாறிவிட்டாராம். உள்ளூர் அரசியலில் எதிர்க் கோஷ்டியில் ஸ்டாலின் ஆதரவாளர் 'அமைச்சர் அன்பரசன்' இருப்பதால் ராஜா இந்த நிலை எடுத்து விட்டாராம். சமீபத்தில் தொகுதியில் நடந்த ஒரு நிகழ்ச்சியில் சீனியர் அமைச்சர் கோ.சி. மணியும், அன்பரசனும் கலந்துகொள்ள, ராஜா புறக்கணித்து விட்டார்.

– சஞ்சயன்

**பாலிடிக்ஸ் பஜார்**

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான சிறுகதைகள்**

**1**

"சொக்கன் வந்துட்டானா?"

"கெழக்கால பக்கம் நிக்கிறேன் சாமி....."

"அப்பிடியே பந்த கால் பக்கம் குந்துடா. அரை மணிக்கொரு தரம் நீயா பாத்து ஊதவேண்டியது தான்... சுத்தம்பற ஊதுனாத்தான் பேசுனபடி காசு..." தலையாரி உத்தரவு போட்டுக்கொண்டே நடந்தார்.

"தெரு கிளிஞ்சிடாது... ஒன் சோலியப்பாரு... அய்ய.... என்னப் பத்தி கவலப்படாதே" சங்கை எடுத்து மணி அடித்தபடி ஊதத் துவங்கினான் சொக்கன்.

தெரு சனம் ஒவ்வொருவராய் வரத் துவங்கினர். சின்ன வயசு சாவுதான் என்றாலும் விபத்து நடந்து மூணு மாதமாகியும் அப்பவோ இப்பவோ என்று இழுத்துக்கொண்டதில் எதிர் பார்த்த சாவுதானே என்ற அசுவாரசியம் தெரிந்தது எல்லோர் முகத் திலும். ஊரில் நல்ல காரியம் வைக்க தேதி குறிக்க முற்படுபவர்கள் 'எதுக்கும் ஒரு எட்டு செவனாண்டி ஊட்டுல பாத்துட்டு வா... அங்க வேற ஒண்ணு சொன்னைகரைக்குப் போவே னான்னு அடம் புடிச்சுகிட்டுக் கெடக்கு' ஆளனுப்பி பார்க்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஊ வயசெல்லாம் ஒரு வயசா... ஆனாலும் மனித மனம் எத்தனை குரூரமாக மாறிவிடுகிறது சுயநலம் என்று வந்துவிட்டால்... செவனாண்டி மகன் சம்பத்து வண்டியில் ஏறி ஒரு அரக்கு அரக்கிப் பறந்தா னென்றால் தெரு கொஞ்சம் ஆடித்தான் போகும். கடைசியில் அவனது வாகனமே அவனுக்கு எமனானது.

முதுகெலும்பில் பட்ட அடி மூளையைப் பாதிக்க வெறும் உயிர் ஓடும் ஊடகமாக மட்டுமே அவனது உடல் கிடந்தது மூன்று மாதமாய்...

"முருகேசா... மருதாயி கெளவிக்கு ஆளனுப்பிட்டியா?"

"அனுப்பிட்டேன் பெரிசு. மதியமா வர்றேன்னிருக்கா..."

"அதுவும் செரிதான்... தெருக்கார சனத்துக்குத் தொண்டை அடுத்தவேளை கவளம் எறங்கறவரைக்குந் தான்...அப்பறம் கதை பேச ஆரம்பிச்சுடுவாளுக... அப்புறம் ஒப்பாரி வைக்க ஆளிருக்காது. மருதாயி அப்பம் வந்தா போதும்."

மருதாயி கெளவி குரலும், ஒப்பாரியும் ஜில்லா பிரசித்தம். எங்க சாவு விழுந்தாலும் முறைக்காரனுவங்களுக்கு முன்னாடி அவளுக்குச் செய்தி போயிடும். அப்பப்ப டீ தண்ணியும், ஒரு சொம்பு சுடு தண்ணியும் இருந்தா போதும். ரெண்டு நாளானாலும் பிசிறு தட்டாது. வெங்கலக் குரல் அவளுக்கு.

புருஷன்காரன் ரெண்டு புள்ளையக் குடுத்துட்டு ஓடிப்போனப்பறம் தென்னங்கீத்து முடையற வேலை போக ஒப்பாரிக்கு போறதுலதான் அவ பொழப்பு ஓடுது.

பாத்திர யாவாரி வேலுவைத்தான் கட்டிப்பேன்னு ஒத்தக் கால்ல நின்னு, இப்ப அவங்கிட்ட அடியும் ஒதையும் தின்னு ஒடம்பு வீங்கி மாசம் தவறாம வர்ற மவ எச்சுமி பத்தின துக்கமும், காலு வெளங்காம மூளை வளராம ஊட்டை விட்டு நகராம மொடங்கிக் கெடக்கற மவன் ராசுவோட வைத்தியத்துக்குக் காசு இல்லாத துக்கமும் தீரப்போவதுமில்லை... அவ அழுக ஓயப் போறதுமில்லை.

எப்படி முடியுது விடாம அழுவ அப்பமன்னு யாராவது கேட்டா, 'உங்களுக்கெல்லாம் பொறக் கறச்சயும் சாவறச்சையும்தான்



**நெய்வேலி பாரதிக்குமார்**

அழுவை. எனக்குப் பொழப்பே அழுவைதான்' - அவ பொலம்பறதைக் கேட்டா கஷ்டமாத்தான் இருக்கும்.

**ம**ருதாயிக் கெழவி அடுப்பு நெருப்பைத் தூண்டியபடி எசக்கி பக்கம் திரும்பாமல் ஏக்கச்சக்கக் கோபத்தில் இருந்தாள்.

''எவடி இங்க ஒன்னை வெத்தலைப் பாக்கு வெச்சுக் கூப்பிட்டா? எதுக்கு வர்றே? பெரிய கார்த்திகை அன்னிக்குக்கூட வயித்தால போயி இப்பவோ அப்ப வோன்னு கெடந்தேன். இருக்காளா செத்தாளான்னு பாக்க ஒரு நாதியில்லே. இப்ப

# விசும்பல்

மட்டும் எதுக்குடி வந்தே...?''

''எங்க போவேன் ஆத்தா... நெனச்சா வர்றதுக்கு சீமான் வூட்லயா வாக்கப்பட்டிருக்கேன்? ரெண்டு அலுமினியப் பாத்திரத்தை வெச்சுகிட்டுத் தெருத்தெருவா சுத்தற வெறும் பயகிட்டல்ல லங்கு அடிச்சிட்டுக் கெடக்கேன்...''

''நானாடி கட்டிக்கச் சொன்னேன்? ஒத்திமிருக்கு நாயி வாயில வெரல விட்டுட்டு இப்பக் கடிக்கிதே கொதறுதேன்னா எப்பிடி?''

''அதான்... அதான. மகராசம். என் புத்திக்கு நாத்தம் புடிச்சிக் கெடக்கேன். மவராசி நீ சொன்னதான்... வெளக்கமாத்தால மொத்து. என்னை அடிச்சிக் கொல்லு... ஆனா வராதேன்னு சொல்லாதே ஆத்தா.''

பேரப்பய முருவன் இது எதுலயும் கவலப்படாம மருதாயிக் கெழவி புடவையப் பிடிச்சு இழுத்தான்.

''வருந்தோறும் ஏண்டி இந்த சிகவ வேற இளுத்துகிட்டு வர்றே... தூண்டிப் புழுவாட்டம். இவனக் காமிச்சிக் காமிச்சி இருக்கற மினெல்லாம் பிடிச்சிட்டுப் போயிட்ட. இப்ப ஏங்கிட்ட என்னாடியிருக்கு? கொளம் வத்திப் போச்சு. போதும் என்ன வுட்டுடு.''

''அப்பிடி சொல்லாத ஆத்தா. சைக்கிளப் பிடுங்கிட்டுப் போயிட்டான் கடங்காரப்பய. அவன் ஒரு கழிச்சல்ல போவோ... வெக்கங் கெட்டு அவன் கால்ல வுளுந்துகூட கதறிப் பாத்தேன். படுபாவி மனசு இரங்கலையே. எட்டி ஒதச்சிட்டுப் போயிட்டான். சைக்கிள் இல்லாம யாவாரத்துக்கு எப்பிடி போவும்?''

முருவன், சோர்ந்து சுருண்டு கிடக்கும் ராசுவின் முகத்தில் இரு கைகளால் அடித்து எழுப்பினான். ஒரு முறை தலையுயர்த்திப் பார்த்து விட்டு, இயலாமல் திரும்பவும் சுருண்டான் ராசு.

''அங்க பாரு... ஆமை மாதிரி கெடக்கு. என்னால சாவக்கூட முடியாதுடி. இது இருக்கற வரைக்கும் என் உசிரப் புடிச்சு வெச்சிக்கணும். ஒப்பன் ஓடிப் போறப்ப வைரமும் வைடூரியமுமா வெச்சிட்டுப் போனான்...? இந்தச் சப்பாணிப் பயல ஏந்தலையில சுமையா தானே வெச்சிட்டுப் போனான்? எங்க சுத்தி எங்க வந்தாலும் ஏவைக்கு ஓடு திரும்பிடணும். ஒரு ஆம்பளையா லட்சணமா சைக்கிள் வாங்கப் பணம் பொரட்ட முடியாத பொறம் போக்கு ஒன்னை ஒதைச்சு அனுப்புறானே... தாத் தேரி... வெளங்கு வானா?''

''நல்லா துப்பு... காறி துப்பு.'' புடவைத் தலைப்பை எடுத்து முகத்தை மூடிக்கொண்டு அழுத எச்சுமி, ''அடி...தாங்கலை ஆத்தா. ஆம்பளையா லட்சணமா என்னையத்தான் போட்டு ஒதைக்கிறான். நேர்ல பாக்க ஒனக் குக் கொடுத்து வெக்கலை. சம்பாதிக்கத் துப்பில்லைன்னு சொல்லிட்டாப் போதும்...



எலும்ப ஒடிச்சிட்டுத்தான் மறுவேலை... இங்கப் பாரு'' என்று புடவையைத் தூக்கி கெண்டைக்கால் காயத்தைக் காண்பித்தாள்.

''புள்ளையையும் காயத்தையும் காட்டிக் காட்டி என்னைக் கரைக்காதடி. வேணுமானா ஒரு ஓரமா ஒக்காரு. ஒருபாட்டம் ஒனக்காவ அழுவறேன்.''

''காதுல போட்டிருந்தியே எழு கல்லுத் தோடு... அதைக் கொஞ்சம் குடு ஆத்தா. அட்டணையை விக்க மாட்டேன்... எங்கனாச்சும் வெச்சி, ரெண்டு மாசம்... எண்ணி ரெண்டே மாசம் மூட்டுக் குடுத்துடறேன்.''

''ஏங்கிட்டப் பொட்டுத் தங்கம் இல்லே தாயி... ஆளை வுடு. அத வெக்கத்தான் எனக்கு

வைத்தியம் நடந்துச்சு. தோ... கெடக்கானே சவலைப் பிள்ளை... அவனுக்கும் வைத்தியம் பாத்தேன். இனும ஒரு நயா பைசா பேறாது.''

''கஞ்சிக்கிக் கூட வழியில்ல வூட்ல... யாவாரத்துக்குப் போயி இன்னியோட நாப்பத்தஞ்சு நாளாச்சு. இன்னும் எத வித்து சாப்பிடறதோ தெரியல. எப்பிடிப் பொழைப்பேன் ஆத்தா?''

''நீ வாழ வேண்டாண்டி வாழ வேணா. ஒண்ணு, இங்க வந்துறு. இல்ல செத்துப் போயிடு. ஒருத்தி வாழ ஒம்போது பேர் சாவ முடியாது. வாழ்ந்து வழிச்சது போதும். போம்மா மவராசியா.''

**எங்கப் போவேன் ஆத்தா. நினைச்சா வர்றதுக்கு சீமான் வூட்லயா வாக்கப்பட்டிருக்கேன்.**

''என்னா ஆத்தா இப்புடிச் சொல்லிட்ட... ஒரு பெத்த தாய் இப்புடிப் பேசலாமா?''

''என்னை என்னடி பண்ணச் சொல்ற? வந்ததுக்கு ஆக்கி வெச்சிருக்கறதச் சாப்புட்டுட்டு அந்த அரிசிப் பானையில கொஞ்சம் நொய்யரிசி இருக்கு. எடுத்துட்டுக் கௌம்பு. அவ்வளவுதான் முடியும்.''

''ஏ கெளவி... தலையாரி ஒன்னை அர்ஜண்டா வரச் சொன்னாரு. பாடைக் கட்டுறப் பயலுவ கூட வந்துட்டானுவோ. ஒன்னைக் கையோட இட்டாரச் சொன்னாரு'' வாசலில் குரல் கேட்டது.

தலை முடியை அள்ளி முடிந்துகொண்டு கிளம்பிய மருதாயி, ''ரெண்டு ரெஸ்க் கெடக்கு அந்தப் பச்சை டப்பாவில.முருவனுக்கு அதை எடுத்துக் குடு. இங்க ஒரு எழவு. நா போவணும். சாப்புட்டு நீ கௌம்பு.'' வெளியேறினாள் மருதாயி.

**செ**வனாண்டி வீட்டில ஜனம் கொலே ரென்று கூடியிருந்தது. மருதாயி தெருவுக்குள் நுழைந்தபோதே புரிந்துகொண்டாள். ஒறமொறக்காறனுவ அதிகம்னு. கூடுமான வரைக்கும் எவ கொரலையும் எழும்ப விடக் கூடாதுன்னு தொண்டைய செருமிக்கிட்டு, கையிரண்டையும் உயரே விரித்து, பெருங்குரலெடுத்து,

''அய்யோ... ஈ வந்து மொய்க்கலையே
எறும்பு ஒன்ன நெருங்கலையே
கண்ணுல வெச்ச உசிர
இமை கூட காக்கலையே...
என்னப் பெத்த அய்யா
பூவாட்டம் தூங்குறியே
பொழுது இன்னும் சாயலியே''

என்று பிணத்தருகே சென்று அட்டணக்கால் போட்டமர்ந்து மூக்கைச் சிந்தி அருகாமை தூணில் தடவினாள்.

சிவனாண்டி பெண்டாட்டியும் மாமியாரும் பாய்ந்து வந்து மருதாயியைக் கட்டிக்கொண்டு அவள் பாட்டுக்கு சுருதிபோல ராகம் போட்டு அழுதனர்.

''வலை போட்டு வீசினாலும்
சிக்காத வஞ்சிரமே...
சங்கு கழுத்தழகா
உன் சிங்கார சிரிப்பழகா
சேத்து வெக்க மறந்தேனே
பாவி, இனியெப்ப பாக்கப்போறேன்
பொசக் காத்துப் போறாப்ல ஏங்கண்ணே
'பொசுக்'குன்னு பறப்பியே தெருமேல
பொணமாக் கெடக்கியே
புயலோஞ்சு கெடக்குது ஊரு''

ஒரு மணி நேரம் சளைக்காமல் தனியாவர்த்தனமாய் ஒலித்தது கெழவியின் ஒப்பாரி.

மேட்டுத் தெரு பொன்னம்மாவுக்கு மருதாயி மேல் தாங்கமுடியாத பெருமிதம் உண்டு. யாருக்கும் கேட்காமல் பக்கத்திலிருந்தவரிடம் கெழவியின் பராக்கிரமத்தைப் பரப்பிக் கொண்டிருந்தாள்.

''எம காதகி... அவ இழுவைக்கு எவளும் கிட்டே நெருங்க முடியாது. அழுவுறத நெறுத்

திட்டா பொணமே எந்திரிச்சி 'பாடுடி இன்னும் செத்த'ன்னு கேக்கும்!''

"நெசம்தான் ஆத்தா! பெத்தவகூட இத்தனை பதறலை... அட! இவ ஒப்பாரிக்கே சாகலாம் போலிருக்குன்னா பாத்துக்கயேன்.'' பொன்னம்மாவுடன் பாக்கியமும் உவந்தோங்கிப் போனாள்.

''இருக்காதா பின்னே... நம்ம வல்லக் கோட்டைக்காரரோட மூத்தாரு செத்தப்ப, அவரு புள்ள சிங்கப்பூரிலேருந்து வரணும்னு ரெண்டு நாள் பொணம் கெடந்துது. மவராசி ஒயலியே! ரெண்டு நாளும் இவ அசராம வெச்ச பாட்டுலதான் பொணம் நாறாம தூங்குச்சுன்னு இப்பவும் ஊர் பேசுதே.''

''மூஞ்சுல அழகை வெக்கலைன்னாலும்... மூச்சுல அழுவைய வெச்சுட்டான் கடவுள்.''

ருக்குமணி கெழவி மருதாயி காதில், ''ஒன்னைப் பத்திதான் பின்னாடி இருக்கறவளுவோ பேசிக்கறாளுவோ.''

''உளுது... உளுது... காதுல உளுது. பின்னாடி எல்லா சிறுக்கிவோளும் பெருமையாத்தான் பேசுறாளுவோ... எதுக்க வந்துட்டா ஒப்பாரி வெக்கிறவ வர்றாளே... சகுன பெசகுன்னு ஒளியுறாளுவோ. எதுவியும் எனக்கு ஏறுமாறுதான். பாரேன்... வெத்தலைத் தட்டில கனிப்பாக்கைத் தேடறேன் பொட்டலம் பாக்கா கெடக்கு!'' என்றபடி கனிப்பாக்குக்காக முந்தியின் முடிச்சையவிழ்க்கும் போது பகீரென்றது அவளுக்கு.

தோட்டைக் காணோமே என்று விக்கித்து ஒருகணம் திகைத்த மருதாயிக்கு உடனே ஞாபகம் வந்தது. 'அய்யோ நேத்துதானே பத்திரமாயிருக்கட்டும்னு அரிசிப்பானையில வெச்சேன். ஆக்கங்கெட்ட மூதி! அத மறந்துட்டு முந்தியில முடிஞ்ச நெனப்பா வந்துட்டேனே... ராசுப் பயலுக்கு இடுப்பு தேஞ்சித் தேஞ்சி ரணமாக் கெடக்கு. டவுனுக்குப் போயி வைத்தியம் பண்ணலாம்னு இத்தினி நாளு சாக்ரதையா காவந்து பண்ணி வெச்சிட்டு இன்னைக்கு வுட்டோட்டிட்டேனே... சும்மா கெடந்தவள நொய்யரிசிய எடுத்துக் கோன்னு வேற சொல்லித் தொலைச்சிட்டேனே... பாதகத்தி கண்ணுல பட்டுட்டா நோவாம எடுத்துடுவாளே. வெக்கத் தெரியாதவ வெக்கப்போர்ல வெச்ச மாதிரி...

அப்போதுதான் உள்நுழைந்த சிவனாண்டியின் உறவுக்காரி மருதாயியைக் கட்டிக்கொள்ள ஒப்பாரியை விட்ட இடத்திலிருந்து தொடங்கினாள் மருதாயி.



"கையிருப்பு கரைஞ்சிடுச்சே
களவாட விட்டுட்டேனே
தங்கமே ஒன்ன
ஒளிச்சு வெக்கத் தெரியலையே
எமங் கையில கொடுத்தேனே
வெலையில்லா பொக்கிஷமே
வேற கதி ஏதெனக்கு
ஒண்ணே ஒண்ணு
ஏங்கண்ணே கண்ணு
ஒன்னை விட்டா யாரெனக்கு?
கழுகு ஒன்னக் கொத்தாம
காவந்து பண்ணி வெச்சேன்
பருந்து ஒன்னத் தூக்காம
பத்திரமா பாத்து வெச்சேன்

காத்தாட்டம் பறந்திடுச்சே
கண்சிமிட்டும் நேரத்தில
கைவிருப்பு கரைஞ்சிடுச்சே
களவாட வுட்டுட்டனே''

தாண்டிச் சென்ற தலையாரியை அழைத்து 'எப்ப சாமி எடுக்கப் போறீங்க' என்று கேட்டாள்.

''எடுத்துட வேண்டியதுதான். குளுசம் முடிய அரை மணியிருக்கு. இப்ப ஒனக்கென்ன அவசரம்?''

''இல்ல... ஏம் மவ வந்திருக்கா...''

''ஆமா, டெல்லிக்கு மகராணி... சோத்தைத் தின்னுட்டுக் கெடக்கப்போறா... போலாம் போலாம்... தொணப்பாதே.''

இன்னும் அரைமணி நேரமா.. அதுக்குள்ள அவ கையில சிக்கிட்டா... சண்டாளி அடுத்த செகண்டு கௌம்பிடுவாளே... இருப்புக் கொள்ளாமல் தவித்தாள் மருதாயி. நிமிஷங்கள் நரகமானது.

**''நம்ம தலைவர் பை எலக்ஷன்ல ஜெயிச்ச உடனே எதுக்கு சுடுகாட்டுல போய் நன்றி சொல்றாரு?''**

**''செத்தவங்க பேர்ல நிறைய கள்ள வோட்டு போட்டு ஜெயிச்சாரே அதான்.''**

**- வி.சாரதி டேச்சு**

'பொணத்தக் குளுப்பாட்டணும்... எல்லாம் செத்த வெளிய இருங்க,'' ஏழுமலையின் குரல் கேட்டு அப்பாடாவென்றிருந்தது அவளுக்கு. குளிப்பாட்டி முடித்த பிறகு... ''கோயிந்தா... கோயிந்தா...'' என்றபடி பிணத்தைத் தூக்க பெண்டுகளும் குரலுயர்த்தி அழுதனர். நகரத் துவங்கியது ஊர்வலம்.

எப்பவும் மணிக்கடைக்கு வந்து மயும் பொறையும் உள்ளே போனால்தான் வண்டி நகரும் மருதாயிக்கு. ஆனால் இன்னைக்கு அதையெல்லாம் உதறிவிட்டு ஓட்டமும் நடையுமாக தெருமுனைக்கு ஓடி வீட்டுக்குள் நுழைந்தாள். ராசு மட்டும் கூழையாய்ச் சுருண்டு கிடந்தான். நடுவீட்டில் அரிசிப் பானை கவிழ்ந்து கிடந்தது. நிமிடத்தில் புரிந்து போனது மருதாயிக்கு.

''அய்யோ பாதகத்தி... கண்ணு சிமிட்டறதுக்குள்ள களவாண்டுட்டியே... நீ கட்டையில போவோ...'' என்று புடைவையைக் கீழே விரித்து கதறத் துவங்கினாள்.

ராசுவுக்கு விழிப்பு வந்து ஒருகணம் அலங்க மலங்கப் பார்த்தான். பிறகு, தலையை ஒரு உதறு உதறித் திரும்பவும் சுருண்டு கொண்டான்.

''பெத்த வயித்துல பெரண்டைய வெச்சிக் கட்ட. இப்படி ஒரு புள்ள எனக்குத் தேவையா...பாழும் வயித்துல நெருப்பு வெச்சித் தீய்க்க...'' 'ஓ'வென்று ஓலமிட்ட அவளது குரல் இரவைக் கிழித்து தெருவெங்கும் பரவியது.

''கெழவி நிறுத்து. நிறுத்துன்னா நிறுத்தணும்'' குடிகார மாசிலாமணி குரல் இடி போல் வெளியே கேட்டது. நிற்கவே முடியாத அளவுக்குப் போதை தலைக்கேறி தள்ளாடினான் மாசி. ''உள்ள வந்தேன்... மிதிச்சிடுவேன். இப்ப எதுக்கு அழுவுற...? யார் இங்க மண்டையப் போட்டா? அப்புறம் எதுக்கு ஒப்பாரி? ஒழுங்கா வாய மூடு. இல்ல... தலையாரிகிட்ட தெருக்காரங்க எல்லாம் சேந்து எந்த எழவுக்கும் உன்னக் கூப்புடக் கூடாதுன்னு கண்டிச்சி சொல்லிடுவோம். அப்பறம் ஒன் பொழப்பு நாறிடும் நாறி!'' என்று துண்டை உதறி வீசிவிட்டு நடையைக் கட்டினான்.

''ஒழிச்சிடுவேன்... யாருகிட்ட....'' என்று காற்றிடம் சவால் விட்டு நாக்கைத் துருத்தி எச்சரிக்கை செய்தான் மாசி.

உறவே இல்லாத எத்தனையோ பிணத்துக்காக தொண்டை வறள ஒப்பாரி பாடிய மருதாயி பொழப்புல மண்ணு விழுந்துடுமோன்னு பயந்து வாயில் துணியைப் புதைத்துக்கொண்டு சப்தம் வராமல் விசும்பினாள்.

கழுவ முடியாத கறையோடு கண்ணீர் அவளது சுருங்கிய கன்னங்களில் உருண்டோடிபின் விக்கித்து நின்றது.

# பெரிய மனசு!

ஆஹா! அந்த மகத்தான கோபுரத்தைப் பார்க்கப் பார்க்க - என் கழுத்தை வலிக்கிறது; எவ்வளவு உயரம்! எவ்வளவு அகல நீளம்! இத்தனை பெரிய கோபுரம் திடீரென்று முளைத்து விடுமா? ஆறு வருஷத்திலே அதைக் கட்டியிருக்கலாம். ஆனால், அதற்கு முன் எத்தனை வருஷ காலம் அது ராஜராஜனுடைய உள்ளத்தில் கட்டப்பட்டு வந்ததோ, யாருக்குத் தெரியும்?

அப்படிப்பட்ட அவனுடைய உள்ளம் எத்தனை பெரிதாயிருக்க வேண்டும்? ராஜராஜனுடைய விஷயங்கள் எல்லாமே பெரியவைதான். அவனுடைய ஸாம்ராஜ்யம் பெரியது; அதிலுள்ள சிவலிங்கம், நந்தி எல்லாம் பெரியவை. அற்பமாகவும் சின்னதாகவும் அவனால் எதையுமே சிந்தித்திருக்க முடியாது என்று தோன்றுகிறது. அவனுடைய மகன் இராஜேந்திர சோழனும் அவ்வளவு பெரிய மனது படைத்தவனாயிருந்து பெரிய காரியங்களைச் செய்திருக்கிறான்.

இந்தக் கோபுரத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய இன்னும் இரண்டு விசேஷங்கள் பாக்கியிருக்கின்றன. அதில் அமைந்திருக்கும் சிற்பங்களில் அநேகம் வைஷ்ணவ சம்பிரதாயக் கதைகளைக் குறிப்பவை. புத்தருடைய வாழ்க்கையிலிருந்து சில காட்சிகளும் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ ராஜராஜ சோழன் சைவ சமயத்தினனாயினும், மதத்துவேஷம் கொண்டவனல்ல; சர்வ சமய சமரஸ மனப்பான்மை கொண்டவன் என்பதற்கு மேற்படி சிற்பங்கள் அத்தாட்சியாகும்.

இன்னொரு விசேஷம் என்னவென்றால், தமிழ்நாட்டில் பிற்காலத்தில் கட்டப் பெற்ற முன் வாசல் கோபுரங்கள் பலவற்றில் அசிங்கமான பொம்மைகள் பலவற்றைக் காண்கிறோம். 'ஆபாஸங்களின் மூலமாகத்தான் பாமர ஜனங்களைக் கவர முடியும்' என்ற மனப்பான்மை நாயக்கர் மன்னர் காலத்திலே ஏற்பட்டு விட்டதாகத் தோன்றுகிறது. ஆனால், சோழ மன்னர்களின் காலத்தில் அது இல்லை. தஞ்சாவூர்க் கோபுரத்தில் ஆபாஸக் காட்சியே கிடையாது! **(கல்கி களஞ்சியம் புத்தகத்தில்...)**






# இனிமையான குவா...குவா...

“ஹலோ... 108ங்களா?” “ஆமா.. சொல்லுங்க!” “சாந்திங்கற பொண்ணுக்குப் பிரசவ வலி வந்து துடிக்குதுங்க!” “எந்த ஊர்ன்னு சொல்லுங்க” “பெரிய ஆணைக்காரன்பட்டி கிராமத்துலேர்ந்து பேசுறோம்ங்க. மணப்பாறையிலேர்ந்து முப்பது கி.மீ. தூரம். பால விடுதி பக்கத்துலங்க. மெயின் ரோட்டுலேர்ந்து மூணு நாலு கி.மீ. தூரம் உள்ளார வரணும்!” “சரி, இன்னும் கொஞ்ச நேரத்துல ஆம்புலன்ஸ் வந்துடும்!”

அடுத்து முக்கால் மணி நேரத்திற்குள், 108 ஆம்புலன்ஸ் பெரிய ஆணைக்காரன்பட்டி கிராமத்தின் சாந்தி வீட்டு வாசலில் நிற்கிறது. கணவர் ராமசாமி கூலித் தொழிலாளி. பிரசவ வலியில் துடித்துக்கொண்டிருக்கும் சாந்தியை, படுக்கையில் சுமந்து கொண்டு ஆம்புலன்ஸ் வேகமெடுக்கிறது மணப்பாறை அரசு மருத்துவமனை நோக்கி.



சாந்திக்கு வலி தாளவில்லை. ஆம்புலன்ஸில் உடன்வரும் பயிற்சிபெற்ற அவசர கால மேலாண்மை நிபுணர் பழனியம்மாள், வண்டியை ஓரமாக நிறுத்தச் சொல்லி, பேறுகால ஆயத்த மருத்துவம் பார்க்கிறார். குழந்தை பிறக்கிறது. அதுவும் இரட்டைக் குழந்தை. பத்து நிமிட இடைவெளிகளில் அழகிய இரு ஆண் குழந்தைகள். அதற்கான அடிப்படை மருத்துவம் பார்த்து, ஆம்புலன்ஸ் மணப்பாறை அரசு மருத்துவமனை நோக்கி மீண்டும் செல்கிறது.

- ஸ்ரீ

திருச்சி மாவட்டப் பகுதிகளில் மட்டும், 108 ஆம்புலன்ஸ் வண்டிகளிலேயே இதுவரை இருநூறு குழந்தைகள் பிறந்துள்ளன. ஆம்புலன்ஸில் அழைத்துச் சென்று மருத்துவமனைகளில் பிறந்த குழந்தைகள், கடந்த இருபத்திரெண்டு மாதங்களில் சுமார் ஆயிரம் குழந்தைகளுக்கும் மேல் இருக்கும். 108 ஆம்புலன்ஸில் பிறந்த 108வது குழந்தை, துறையூர் தாலுகா சிக்கத்தம்பூர் கிராமத்தின் அங்காள ஈஸ்வரியினுடையது. அழகிய பெண் குழந்தை!



# குருதசைக்கு

**எஸ்.சுந்தரவல்லி, பெங்களூரு.**

***என் மகளுக்கு மூல நட்சத்திரம். இன்னும் திருமணம் நடக்கவில்லை. பிறந்த தேதி 15.5.1979. காலை 10.42 சென்னை. எப்போது திருமணம் நடக்கும்?***

தற்போது சந்திர தசையில் குரு புத்தி 31.5.2011 வரை நடக்கின்றது. உங்கள் மகளுக்கு அதற்குள் திருமணம் நடந்துவிடும். மூலம் நட்சத்திரம் மிக உயர்வானது. ஆனி மூலம் அரசாளும். பின் மூலர் நிர்மூலம் (எதிரிகள் நிர்மூலம்) என்பது ஜோதிடப் பழமொழி. இதைத் தவறாகச் சிலர் சொல்லி வருகின்றனர். பின் மூலம் என்றால், மூலம் 4-ம் பாதம் என்று பொருள். மூலம் 4-ம் பாதத்தில் பிறந்தவர்களை யாராலும் ஜெயிக்கமுடியாது என்று இதன் அர்த்தம். மாமனார் அல்லது மாமியாரின் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் அளவுக்கு அது கொடூரமான நட்சத்திரம் அல்ல. ஜோதிடத்தின் பெயரால் பல மூடநம்பிக்கைகள் உள்ளன. அவற்றுள் மூலநட்சத்திரம் பற்றிய நம்பிக்கையும் ஒன்று. இது வன்மையாகக் கண்டிக்கத் தக்கது. மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம்.

**பழனிகுமார், பாண்டிச்சேரி.**

***எனக்கு இப்போது குரு தசை நடைபெறுகிறது. எந்தெந்த தலங்களுக்குச் சென்று நான் வழிபட வேண்டும்?***

ஆலங்குடி, திட்டை, திருவல்லிதாயம் (சென்னை பாடி), திருச்செந்தூர், குருவாயூர், காஞ்சிபுரம்

## பளிச் பரிகாரம்

உங்கள் கேள்விகளை ஜாதகக் குறிப்போடு 'பளிச் பரிகாரம்' என்று குறிப்பிட்டு அனுப்புங்க...
kalki@kalkiweekly.com க்கும் அனுப்பலாம்.

வரதராஜப் பெருமாள் கோயில்... ஆகிய ஆறு தலங்களும் வியாழ பகவானால் வழிபட்ட தலங்களுள் மிக முக்கியமானவை. குரு தசை நடைபெறுபவர்கள் மட்டுமின்றி அனைவருக்குமே குரு அருள் தரும் தலங்கள் இவை.



**கோதண்டராமன், சேலம்.**
***செல்வச் செழிப்பு உண்டாக என்ன வழிபாடு செய்ய வேண்டும்?***

தினமும் ஸ்ரீலக்ஷ்மி ஸஹஸ்ரநாமம் படியுங்கள். அல்லது ஒலிக்கச் செய்து கேளுங்கள். லட்சுமி கடாட்சம் உண்டாகும்.

**தமிழ்ச்செல்வி, சென்னை-15.**
***ஏழரை நாட்டுச் சனி நடைபெறுபவர்கள் மட்டும்தான் திருநள்ளாறு செல்ல வேண்டுமா?***

அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. யார் வேண்டுமானாலும், எப்போதும் செல்லலாம்.

# எந்தக் கோயில்?

**கே.வி.எஸ்.ராஜா, சென்னை-17**
***குடும்பத்துடன் நாங்கள் அடிக்கடி திருத்தணி, திருப்பதி, ஸ்ரீகாளஹஸ்தி... தலங்களுக்குச் சென்று வருவது வழக்கம். ஸ்ரீகாளஹஸ்தியில் இரவு தங்கினால்தான் பலன் என்கிறார்கள். உண்மையா?***

இல்லை. சென்று தரிசனம் செய்துவிட்டு வந்தால் போதும். இரவுத் தங்கல் 'கம்பல்சரி' என்பது சரியல்ல.



## ஹரிகேசநல்லூர் வெங்கட்ராமன்

# ப யா ஸ் கோ ப்


'தம்பி வெட்டோத்தி சுந்தரம்' படத்திலிருந்து


'காதலர் குடியிருப்பு' படத்திலிருந்து

கர்ணனும் துரியோதனனும் நண்பர்கள்; இது மகாபாரதத்தின் கதை. ஆனால், சஞ்சய்ராம் இயக்கும் 'கௌரவர்கள்' படத்தில் கர்ணனும் துரியோதனனும் எதிரிகள். "ஏன் என்று கேட்டால், அது படத்தின் ஜீவன்'' என்கிறார் இயக்குநர் சஞ்சய்ராம். இவர், ஏற்கெனவே தூத்துக்குடி, ஆடு புலி ஆட்டம் படங்களை இயக்கியவர். சத்யராஜ் விக் வைக்காமல் நடிக்கும் கௌரவர்கள் படத்தை பத்து தியேட்டர் அதிபர்கள் ஒன்று சேர்ந்து தயாரித்திருக்கிறார்களாம்.

பரபரப்புக்கும், அதிரடிக்கும் பேர்போன இயக்குநர் சாமி இயக்கும் படம் சிந்துசமவெளி. '' 'சரித்திரம்' படம் எதிர்பாராமல் பாதியிலேயே தேக்கம் அடைந்த நிலையில் தயாரிப்பாளர் மைக்கேல் ராயப்பனிடம் பத்து நிமிடங்களில்தான் 'சிந்துசமவெளி' கதையைச் சொன்னேன். உடனே இந்தக் கதை நான் தயாரிக்கிறேன்னு சொல்லிட்டார். 'அமைதிப்படை'க்குப் பிறகு ஒரே ஷெட்யூலில் (64 நாட்களில்...) படமாக்கப்பட்டது 'சிந்துசமவெளி'தான்'' என்கிறார் இயக்குநர் சாமி.


'சிந்துசமவெளி படத்திலிருந்து



''என்னோட ஆசையெல்லாம் பருத்திவீரன் கார்த்தியோட நடிக்கிறதுதான்'' என்கிறார் மலர்மேல்நிலைப் பள்ளி ஹீரோயின் ஹசிகா. ''கார்த்தியோட கண்களே பாதிக் கதையைச் சொல்லிடும்'' என்ற பாராட்டு வேறு. 2006ஆம் ஆண்டு கேரள சேனத்



மாடலிங் போட்டியில் பெஸ்ட் மாடலாகத் தேர்வான இவர், 'மிஸ் சௌத் இண்டியன்' மாடல் போட்டியில் 'ப்யூட்டிஃபுல் ஐஸ்' அழகியாகவும் தேர்வானவர்.



நிரசிகா

'சயனைட்' படத்தை 'குப்பி' என்ற பெயர் மாற்றத்தோடு திரைக்குக் கொண்டு வந்த இயக்குநர் எம்.ஆர்.ரமேஷ், 'காவல் குடியிருப்பு' பெயரோடு தொடங்கி இயக்கி முடித்த படத்தை 'காதலர் குடியிருப்பு' என்று பெயரோடு திரைக்குக் கொண்டு வரத் தயாராகி விட்டார். ''சயனைடு (எ) குப்பி படத்தில் ராஜீவ் காந்தி கொலை வழக்குக் குற்றவாளி சிவராசனின் கடைசி நாட்களைப் பதிவு செய்தேன். காதலர் குடியிருப்பு படத்தில் பாபர் மசூதி இடிக்கப்பட்டபோது ஒரு காவலர் குடியிருப்பில் நடந்த உண்மைச் சம்பவம்தான் கதை'' என்கிறார் இயக்குநர் ரமேஷ்.

'கௌரவர்கள்' படத்திலிருந்து

# கர்ணனும் துரியோதனும் எதிரிகள்!

கிரண் நடிக்கும் 'தம்பி வெட்டோத்தி சுந்தரம்' தொண்ணூற்றேழு நாள் படப்பிடிப்பு நடந்து முடிந்துள்ள நிலையில், ரஷ் போட்டுப் பார்த்திருக்கிறார்கள். கதையைக் கேள்விப்பட்ட தெலுங்கு ஹீரோ பவன்கல்யாண் தான் தெலுங்கில் நடிக்க இப்படத்தின் கதை உரிமையைப் பெரும் தொகைக் கொடுத்து வாங்கப் பேசியுள்ளார். ஆனால், தெலுங்கிலும் தயாரிப்பாளர் செந்தில்குமார் தயாரிக்க முடிவெடுத்ததால், பவன் தன் திட்டத்தைக் கை விட்டுவிட்டாராம். தமிழகத்தில் மட்டும் 230 திரையரங்குகளில் இப்படம் வெளியாகவுள்ளதாம்!

**வா**ழ்க்கையே சங்கீதமயம்! காலையில் தாமதமாய் எழுந்தால் அம்மாவிடம் கிடைக்கும் அர்ச்சனையிலிருந்து கோயிலில் அம்பிகைக்கு குருக்கள் செய்யும் அர்ச்சனைவரை எல்லாமே சங்கீதந்தான்! இந்த இனிமையான உணர்வுக்கு உயிரும், உருவமும் கொடுத்து உலவவிட்டிருக்கிறார்கள் அனுராதா ஸ்ரீராமும், ஸ்ரீராம் பரசுராமும்! பொதிகையில் செவ்வாய் தோறும் மாலை 7.30 முதல் 8 மணி வரை ஒளிபரப்பாகும் இந்த நிகழ்ச்சியை நானும், என் மனைவியும் காத்திருந்து காண்கிறோம்!

சங்கீதரசனை பண்டிதர்களுக்கு மட்டுமின்றி, பாமரர்களுக்கும் பொதுவானது என்று உணர்த்திய பெருமை இருபதாம் நூற்றாண்டின் இரண்டாவது பாதிக்கு உண்டு. இந்த சங்கீத மறுமலர்ச்சியின் சாரத்தைப் பிழிந்து, முப்பது நிமிடங்களில் நமக்குத் தருகிறது இந்த நிகழ்ச்சி. தியாகராஜர் கிருதி வேண்டுமா, தெம்மாங்கு இசை வேண்டுமா, ஹிந்துஸ்தானி கஜல் வேண்டுமா, டப்பாங்குத்து சங்கீதம் வேண்டுமா, எல்லாம் பாடி அசத்துகிறது இந்த ஜோடி! செவ்வாய் மாலை எப்போது வரும் என்று காத்திருக்கச் செய்வதும், நிகழ்ச்சி முடிந்து அடுத்த செவ்வாய் வரை, அவர்கள் பாடிக் காட்டிய பாடல்வரிகளை முணுமுணுக்கச் செய்வதும், இந்த நிகழ்ச்சியின் கவர்ச்சியான தாக்கம்!

– முத்து விஜி, மும்பை



**ச**ங்கரா டி.வி.யில் தினந்தோறும் மாலை ஆறு மணிக்கு குருகுலம் நிகழ்ச்சி ஒளிபரப்பாகிறது. அதில் ஒரு பண்டிதர் சுலோகங்கள், பஜனைப் பாடல்களைச் சொல்லிக் கொடுக்கிறார். குழந்தைகள் (பெண், ஆண்) அமர்ந்து கொண்டு அவற்றைக் கணீரென்று திருப்பிப்பாடுகிறார்கள். இவற்றைப் பார்க்கவே கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது. மற்ற சேனல்களில் குத்துப்பாட்டும் சண்டைக் காட்சிகளுமே மிகுதியாகக் காணப்படுகின்றன. சங்கரா சேனல் இதற்கு விதி விலக்கு. 'சங்கரா'வைப் பெரியவர் முதல் சிறியவர் வரை அனைவரும் பார்க்கலாம்.

– மரகதம் ராகவசிம்ஹன், திருவல்லிக்கேணி



# தியாகராஜர் முதல்... தெம்மாங்கு வரை!

**ம**க்கள் டி.வி.யில் இரவு ஏழு மணிக்கு ஒளிபரப்பாகும் 'யாருக்கு ஆயிரம்?' என்ற பொது அறிவு வினாடி வினா நிகழ்ச்சியில் இதுவரை யாரும் ஆயிரம் ரூபாய் வாங்கியதாகத் தெரிய வில்லை. காரணம் சிவாஜியின் 100-வது படம் எது? ரஜினியின் முதல் படம் எது? என்ற சினிமா சம்பந்தப்பட்ட கேள்விகள் எதுவும் கேட்கப்படுவதில்லை. எல்லாமே அறிவுக்கு விருந்து, மூளைக்கு வேலை. குழந்தைகள் முதல் பெரியோர் வரை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டிய தகவல்கள். அடிக்கடி விளம்பரங்கள் (கவர்ச்சி யானது) வந்து நம்மை இம்சிக்காதது பெரிய ஆறுதல்.

– ஆர்.ஜானகிரங்கநாதன்,
சென்னை-4

**வி**ஜய் டி.வி.யில் 18.7.10 அன்று இரவு ஒளிபரப்பான நீயா - நானாவில் சிறுவர்கள் / பெற்றோர் / ஆசிரியர் சார்பில் கலந்துரையாடல் நடந்தது. இதில் கலந்து-கொண்ட மூவருமே மனம் திறந்து பேசி சிறந்த பங்களிப்பை வழங்கினர். குறிப்பாக சிறுவர்கள் வெள்ளந்தியாக அம்மா - அப்பா - ஆசிரியர்கள் பற்றி குறையைத் தெளிவாகக் கூறியது மிக நன்றாக இருந்தது! பெற்றோர்; குழந்தைகள் கூறிய குறையை ஒரு குறை யோடோ அல்லது திட்டோடோ மறந்து விடுவார்கள்! ஆனால் ஆசிரியர்கள் இப்படி நடந்து கொள்வார்கள் என எதிர்பார்க்க முடியாது! குறிப்பாக எந்த ஆசிரியரை, ஏன் பிடிக்காது என்ற கேள்வி சுத்த அபத்தமானது! அத்துடன் சிறுவர்களைப் பொருத்தவரை ஆபத்தானது! டி.வி. மூலம் அவர்கள் அவமானப்படுத்தப்பட்டிருப்பதால் இனி அந்தச் சிறுவனை தனியாகக் கட்டம் கட்டி கேள்வி கேட்பது; அவமானப்படுத்துவது மற்றும் பரீட்சையில் குறைந்த மார்க் போடுவது என பலவகையில் இம்சை படுத்தக்கூடும்! அந்தச் சிறுவனும் ஏண்டா கலந்து கொண்டோம் என வருந்தி பயந்து, இனி எதிலும் பங்கேற்க மாட்டேன் என சொல்லும் நிலைமைக்கு வந்துவிடுவான்! ஆக... இனி கோபிநாத் கேள்வி தொடுப்பதில் ஜாக்கிரதையாகச் செயல்படவேண்டும்!

– கிருத்திகா பிரகாஷ்,
பெங்களூரு

டி.வி.யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி எதுவாயினும்...
'சேனல் சாய்ஸ்' என்று குறிப்பிட்டு எழுதுங்க.
kalki@kalkiweekly.comக்கும் அனுப்பலாம்.




## 108ன் கதை

“ஒருமுறை அமெரிக்காவுக்குச் சென்றபோது அங்கே சாலை விபத்து, தீ விபத்து, மருத்துவ உதவி போன்றவற்றுக்கு அவசரக்கால சேவை இயங்கி வருவது தெரியவந்தது. அங்கே 911ஐ டயல் செய்தால் உடனே சகல வசதிகளும் பொருந்திய ஆம்புலன்ஸ் ஓடி வரும். இந்தியாவில் அவசர மருத்துவ உதவி கிடைக்காமல் கர்ப்பிணித் தாய்மார்களும் விஷக்கடியால் பாதிக்கப்பட்டவர் களும் ஹார்ட் அட்டாக் வந்தவர்களும், வருடா வருடம் ஆயிரக்கணக்கில் இறந்து போவதை எப்படித் தடுப்பது என்ற சிந்தனையில் இருந்த எனக்கு, இந்த 911 போன்று இந்தியாவில் நடத்தினாலென்ன என்று தோன்றியது. அதன் வெளிப்பாடுதான் இன்று பதினான்குக்கும் மேற்பட்ட மாநிலங்களில் இயங்கும் 108 அவசரகால சேவை ஆம்புலன்ஸ் திட்டம்'' என்கிறார் மக்கள் நல் வாழ்வுத் துறையின் முன்னாள் அமைச்சர் டாக்டர் அன்புமணி. இந்தத் திட்டத்துக்குப் பிள்ளையார் சுழி போட்டவர் என்ற அடிப்படையில் அன்புமணியிடம் பேசினோம்.

''இதைக் கொண்டு வந்தது சாதாரண விஷயமல்ல; ஏற்கெனவே ஹைதராபாத்தில் சத்யம் கம்ப்யூட்டர் நிறுவனம் சிறிய அளவில் இதுபோன்ற இலவச சேவையை நடத்திக் கொண்டிருந்தது. அதை முதலில் ஸ்டடி செய்தோம். பின்னர் வரைவுத் திட்டம் தயார் செய்யப்பட்டது. அமைச்சரவையின் ஒப்புதல் பெற, ஓரிருமுறை இந்தத் திட்டத்தைப் பற்றி நீண்ட நேரம் விளக்கிச் சொன்னேன். பிரதமர் உட்பட எல்லோரும் வரவேற்றார்கள். முன்னாள் குடியரசுத் தலைவர் அப்துல்கலாமுக்கு பவர் பாயிண்ட் ப்ரெசென்டேஷன் போட்டுக் காட்டினோம். ‘இது இந்தியாவுக்கு எப்போதோ வந்திருக்க வேண்டும். இப்போதாவது வருகிறதே' என்று விரைவுபடுத்தச் சொன்னார். ‘இந்தத் திட்டத்தில் எங்களுக்கு இருந்த பெரிய சவால் நாடு




# அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு

முழுமைக்கும் பொதுவான தொலைபேசி எண்ணைப் பெறுவதுதான். அந்த வகையில் 108ஐ தேர்வு செய்தோம். ஆனால் அந்த எண் அவசரக் காலத் தேவைக்காக ராணுவ இலாக்காவுக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. கிட்டத்தட்ட ஒரு வருடம் போராடி, 108 எண்ணைப் பெற்றோம்'' என்று சொன்னார் அன்புமணி.

இந்தியா முழுக்க பத்தாயிரம் ஆம்புலன்ஸுகளோடு தொடங்கப்பட்ட திட்டம் இது. தேசிய ஊரக சுகாதார இயக்கம் (National Rural Health Mission) என்ற மத்திய அரசு திட்டத்திலிருந்து, மாநிலங்களுக்கு 108 திட்டத்தைச் செயல்படுத்த நிதியுதவி அளிக்கப்படுகிறது. ''இந்தத் திட்டம் எல்லா மாநிலங்களிலும் அமல்படுத்தப்படும்போது 25,000 ஆம்புலன்ஸ்கள் பயன்பாட்டில் இருக்கும். இதன் தொடர்ச்சியாக தாலுகா மருத்துவமனைகள், ஆரம்ப சுகாதார நிலையங்களில் கட்டுமானங்களைப் பலப்படுத்தி லேட்டஸ்ட் மருத்துவ வசதியைச் செய்து தரவேண்டும்'' என்கிறார் அன்புமணி.

**- ப்ரியன்**

## காலை எழுந்தவுடன் சிரிப்பு

# கதைக்கு விதையான மழை

**எ**ன் அப்பாவோட டிராமா ஓலைக் கொட்டகையில் பெய்த மழை, மற்ற மழைகளைவிட அழகு. அப்பா ஒரு கம்யூனிஸ்ட். இப்போ இருக்கிற கம்யூனிஸ்ட் மாதிரி இல்லை. அவர் பக்கா கம்யூனிஸ்ட். நாடகம் அவரது சுவாசம். டிராமா நடக்கும்போது பெய்யும் மழை ஓலைக் கொட்டகையில் அங்கிங்குன்னு சொட்டு நீர்ப் பாசனத்தை ரசிகர்கள் மேல பிரயோகிக்கும். எனக்கும், அக்காவுக்கும் ஒழுகுகிற இடத்தில் பாத்திரத்தை வைக்கிறதுதான் வேலை. பட், சொட், பொட்டுன்னு பாத்திரத்துக்கு ஏற்றா மாதிரி மழை பேச ஆரம்பிச்சுடும். **'தாங்கும் பாத்திரத்தின் வடிவத்தை ஏற்கும் தண்ணீர் ஆனோம்'**னு ஒரு கவிதை வரி ஞாபகத்துக்கு வருது. டிராமாவில் மழையும் ஒரு கேரக்டரா மாறிடும். நிரம்பிய தண்ணியை எடுத்து ஊத்த நாங்களும் இன்விஷுவல் கேரக்டரா இத்துக் கொட்டா முழுக்க தரியில ஓடும் நூல் மாதிரி குறுக்கும் நெடுக்குமா நடப்போம். **அந்த மழை எங்களோடு நடித்த மழை.**

**ம**ழைக்காலம் வந்தா பெரிய அக்காவுக்கு ஆ துமா தொல்லை அதிகமாயிடும். இதை சரிசெய்ய மெட்ராஸ்தான் போகணும்னு சொல்வாங்க. நாங்க வீட்டைத் தாண் எங்கேயும் போனது இல்லை. அதனா மெட்ராஸ் போறது எனக்குப் பெரி கனவு. 'ரொம்ப மூச்சு இழுத்தாதா மெட்ராஸ் போவாங்களாம்'னு என குள்ளே வருத்தப்பட்டது உண்டு. மழை வந்தா, ஆஸ்துமா மூச்சு வாங்கும். நா மெட்ராஸ் போகலாம்னு மழை வரணும்னு சாமிகிட்டே வேண்டிக்கிட்டது உண்டு. **அந்த மழை மெட்ராஸுக்கு கூட்டி வந்த வாகனம்.**

**ம**ழைப் பாட்டு ஸீன் என்றால் ரொம்பப் பயம். அதுவும் நைட் ஷூட்டிங்னா இன்னும் மோசம். இருட்டுதானேன்னு அக்கம் பக்கம் இருக்கிற மோசமான தண்ணியை எடுத்துக்கிட்டு வந்து நல்ல மழை போல கொட்டுவாங்க. ஷாட் கட்டுன்னு சொன்னதும் உடனே நல்ல தண்ணீரில் குளிச்சடணும். இயல்பா

பெண்களுக்கான பிரச்னையோட நனைந்ததால் உடம்போடு ஒட்டிக் கொண்ட ஆடைகளோட சேரில் உட்கார முடியாம நடுங்கும் குளிரில் 'மழை ஷூட்டிங்' மனசுக்குள்ள வெறுப்பு அக்னியை உருவாக்கிடும். பக்கத்துல இன்னொரு நெருப்பு மூட்டி, 'போம்மா போய்க் குளிர் காய்ஞ்சிக்க'ன்னு பாச மழை பொழிவாங்க. இது எதுக்கு? அடுத்த ஷாட்டுக்கு நடுங்காம அந்த அழுக்கு மழையில குளிக்கத்தான். அந்த சினிமா மழை - **மழையை வெறுக்க வைக்கும் மழை.**

# 7

**ஊர்வசி**

என்னோட டிரைவர் சொல்லிக்கிட்டே வண்டியை ஓட்டினார். ''மழையில்லாம எங்க ஜனங்க தவிக்குது. இந்த அரசாங்கம் ஒண்ணுத்துக்கும் பிரயோசனமில்ல. விவசாயம் இல்லாம தற்கொலை பண்ணிக்கிட்டுச் சாகறாங்க. கடவுள் எப்போ கண் தொறப்பாரோ தெரியலை'' - வண்டி உதயம் தியேட்டரை நோக்கிப் போகுது. அங்கே பிளாட்ஃபாரம் முழுக்க ஜனங்க குடும்பம் நடத்திக்கிட்டு இருக்காங்க. திடீர்னு 'ஜோ'ன்னு (சத்தம் கரெக்ட்தானே?) ஆண் மழை பூமா தேவியைப் பார்க்க வந்துட்டான். அவ்வளவு தான்... பண்டம், பாத்திரம், குழந்தை, குட்டியைத் தூக்கிக்கிட்டு ஜனங்க இங்கும் அங்கும் ஓட, குடிச்சிட்டு 'பா'ன்னு தூங்குறவனின் மப்பையும் கலைச்சிட்டுப் பெய்யும் மழையை அந்த ஜனங்க திட்டுனாங்க பாருங்க. கொலை செஞ்சவன்கூட அந்த

மாதிரி கெட்ட வார்த்தையில திட்டு வாங்கியிருக்க மாட்டான். எப்படி, எப்போ பெய்யணும்னு கூட முடிவெடுக்க உரிமை யில்லாத மழை அன்னிக்குப் பெய்யலை. 'ஓ'ன்னு அழுத மாதிரியே இருந்தது. அப்போதான் எனக்கு ஒரு நாள் தோணுச்சு. 'மழையின் அழுகை'ன்னு. அடுத்து நான் எடுக்கப் போற, இயக்கப் போற படத்துக் குக் கதை மனசுல முளைக்க ஆரம் பிச்சது. படம் முழுக்க மழைதான். அந்த மழை என்னுள் **கதையெனும் விதையை முளைக்க வைத்த மழை.**



**தாங்கும் பாத்திரத்தின் வடிவத்தை ஏற்கும் தண்ணீர் ஆனோம்!**

இரண்டு நண்பர்கள்... ஒருநாள் கடும் மழையில் நனைஞ்சபடி போயிக் கிட்டு இருக்கும்போது அதுல ஒருத்தன் வழுக்கி விழுந்து ஓடையில் சொருகி இறந்துடுறான். ஐய்யோ நண்பன் மனைவி நிர்கதியா நிக்குறாளேன்னு நண்பனின் மனைவிக்குத் தொடர்ந்து உதவி செய்ய, இருவருக்கும் தொடர்பு வந்து கணவன்-மனைவியா ஆயிட்டாங்க. ஒருநாள் மழையில இவங்க ரெண்டு பேருக்கும் சண்டை வருது. சண்டை உச்சத்துக்குப் போகும்போது சொன்னான். ''இந்தப் பாழாப்போன மழை வேற தொல்லை பண்ணுது. அன்னிக்கும் இதுமாதிரி மழையிலதான் அவனுக்கும் எனக்கும் சண்டை வந்து அவனை உதைச்சு ஓடையில போட்டேன். இப்போ இந்த மழையில உங்கிட்ட மாட்டிக்கிட்டு நிம்மதியைத் தொலைச் சேன்''னு. இவளை அடைவதற்காகத்தான் நண்பனை இவன் கொன்னான். சாகும் போது நண்பன் சொன்னானாம். ''என் சாவை இந்த மழைதான் பார்க்குது. இது தான் சாட்சி. இந்த மழையே உன்னைக் காட்டிக் கொடுக்கும் டா''ன்னு. அப்புறம் விஷயம் மழையிலக் கரைஞ்சி அவன் கைதா கிட்டான். இது கேரளா வில் நடந்த சம்பவம். **அந்த மழை இறைவன் அனுப்பிய சாட்சி.**

நல்ல மழை என்பது குடும்பத்தோட உட் கார்ந்து சிரிக்கும் காமெடி போன்றது. நல்ல காமெ டியை முகம் சுளிக்காமல் ரசிக்கிறது போல மழை யைப் பார்த்துச் சிரிக்க, அனுபவிக்கக் கத்துக் கணும். எனக்குப் பிடிச்ச காமெடி மழை யார் தெரியுமா?

(தொடரும்)

படங்கள் : ஞானசேகரன்

# ஊர்வசி போட்டி சில்கி சாரி!



## மாதம் 3 புடவைகள் பரிசு!

***வாசகர்களே!***

ஊர்வசி எழுதும் 'காலை எழுந்தவுடன் சிரிப்பு!' தொடரைத் தொடர்ந்து படிங்க... தொடரையொட்டி வாரம் ஒரு கேள்வி கேட்கப்படும்.

ஒவ்வொரு வாரமும் ஒரு கூப்பன் இடம்பெறும். விடைகள் மற்றும் உங்களின் பெயர் முகவரி ஆகியவற்றை அதிலேயே எழுதி இணைத்து மொத்தமாய் ஒவ்வொரு மாத இறுதியிலும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

சரியான விடை எழுதிய மூன்று வாசகர்கள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு, அம்மாதத்துக்கான அதிர்ஷ்டசாலிகளாகப் புடைவை பரிசு பெறுவார்கள். **தொடரின் இறுதியில் ஒரு மெகா பரிசும் உண்டு!**

ஆகஸ்ட் மாத கூப்பன்களை இணைத்து அனுப்ப கடைசித் தேதி : 06.09.10

ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.

**அனுப்பவேண்டிய முகவரி:**
கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

பெயர் : ........................................................
முகவரி : ........................................................
........................................................
........................................................
........................பின்கோடு:........................
தொலைபேசி : ........................................
இ-மெயில் : ........................................

ஆகஸ்ட் - 22

**மழை சாட்சியாக மாறிய சம்பவம் நடந்த இடம் எது?**

***விடையை டிக் செய்யவும்***

☐ அசோக் நகர்
☐ கேரளா
☐ டிராமா கொட்டகை
☐ சிம்லா

# என் 'செல்'லமே!

கடந்த வாரம் ஒரு நண்பரைச் செல்ஃபோனில் அழைத்தேன். உடனே, எனக்கு பதிலாக, 'தயவுசெய்து நீங்கள் அழைத்த எண்ணைச் சரிபார்க்கவும்' என்று வந்தது.

உடனே, நான் அழைத்த எண்ணைச் சரிபார்த்த பின் மீண்டும் அவரை அழைத்தேன். மீண்டும் 'எண்ணைச் சரிபார்க்கவும்' பதிலே வந்தது. வெறுத்துப் போய் உடனே தொடர்பைத் துண்டித்து விட்டேன்.

பிறகு ஒரு கால் மணி நேரம் கழித்து, நான் அழைத்த நபர் என்னைத் தன் செல்போனில் அழைத்து, ''என்ன நண்பரே, ஏமாந்து விட்டீர்களா? குழப்பமா? எனது எண்ணைச் சரிபார்த்திருப்பீர்களே!

எனது 'காலர் டியூனே', ''தயவுசெய்து நீங்கள் அழைத்த எண்ணைச் சரிபாருங்கள்''தான்! என்றார்.

செல்ஃபோனில் விளையாடுவதற்கு இளவட்டங்களுக்கு ஓர் அளவே இல்லாமல் போய்விட்டது இப்போதெல்லாம்!

அவசரமாக யாரிடமிருந்தாவது ஏதாவது ஒரு தகவலைப் பெறவேண்டுமானால் அவருக்கும் சிக்கல்தானே?

இதுவெல்லாம் ஒரு விளையாட்டா? என்று எண்ணித் தலையில் அடித்துக் கொண்டேன்.

-ஆர்.ஆர்.பூபதி, திண்டுக்கல்.

''பழநி கல்லூரியில் கல்சுரல் புரோகிராம். உங்க செல்ஃபோனைக் கொடுங்கப்பா'' என்றான் முதலாமாண்டு கணினி அறிவியல் பயிலும் என் மகன். ''உனக்கு செல்ஃபோனைப் பாதுகாப்பாக வைக்கத் தெரியாது. விலை உயர்ந்த செல்ஃபோனைக் கொண்டு போனால் கூட்டத்தில் தொலைந்துபோக வாய்ப்பு அதிகம். வேண்டாம்'' என்றேன். ஏமாற்றத்துடன், ''சரிப்பா'' என்று விழாவுக்குச் சென்றான்.

இரவு நெடுநேரமாகியும் மகன் வீடு திரும்பவில்லை. திடீரென்று எதிர்வீட்டு ஏ.இ. அதிகாரி எனக்கு ஃபோன் பண்ணி, ''சார்... சார்... உங்கப் பையன்கிட்ட எனது செல்ஃபோனைக் கொடுத்து விட்டேன். பாவம் அவன் தொலைத்துவிட்டானாம். உங்களுக்குப் பயந்து அவன் வீட்டுக்கு வர மறுக்கிறான்'' என்றார். சரி நடந்தது நடந்துவிட்டது. பையனாவது திரும்பி

நான் செல்ஃபோன் வாங்கியது 2002ல் தான். அது ஒரு பேஸிக் மாடல். விலையோ ரூ.7200/- அதை வாங்கவே கடலூரி லிருந்து, சென்னைக்கு வந்தேன். அன்று இரவு பூராவும், யாரோ ஒரு புதிய மனிதர் என்னுடன் தங்குவதாகவே எனக்குப் பட்டது. செல்லை ஆஃப் பண்ணிவிட்டுத் தான் தூங்கினேன்.

'ஆன்' செய்ய சிவப்பு பட்டனைத் தொடர்ந்து அழுத்த வேண்டுமென்பது எனக்குத் தெரியாது. ஃபோன் சரியில்லை என நினைத்து சென்னை கடைக்காரரைச் சத்தம் போட, 'அந்தச் சிவப்பு பட்டனைத் தொடர்ந்து அழுத்துங்கள். 'ஆன்' ஆகி விடும்' என்றார். இந்தச் சின்ன விஷயம் கூட தெரியவில்லையே, என்று என்னை நொந்து கொண்டேன். இன்று நினைத் தாலும் சிரிப்புத்தான் வருகிறது. என்னைப் பொறுத்தவரை செல்ஃபோன் ஒரு உயிர் நண்பன்.

- வி.ஜி.சத்தியநாராயணன், சென்னை-61

வாசகர்களே! உங்க செல்லஃபோன் அனுபவத்தை எழுதுங்க. KACON என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு உங்கள் அனுபவம், பெயர்

ந்தானே என்று அவனை அழைத்துச் மாதானப்படுத்தினேன்.

மறுநாள் காலையில் என் வீட்டுக்கு ந்த ஏ.இ., ''சார் செல்ஃபோன் என் மைத்துனர் சிங்கப்பூரில் இருந்து அனுப்பியது. ரூ.15,000 ஆகிறது. பையன் தெரியாமல் தொலைத்துவிட்டான். பரவாயில்லை. நீங்கள் ஒரு 0,000 ரூபாய் கொடுங்க... நான் வேறு செல் வாங்கிக் கொள்கிறேன்'' என்றார்.

''என்ன ஸார் நீங்கள் என் பையனிடம் செல்ஃபோன் கொடுத்த விஷயத்தை என்னிடம் ஏன் தெரிவிக்கவில்லை. கூறியிருந்தால் நான் கொடுத்திருப்பேனே... இப்ப ரூ.10,000 கேட்டால் எப்படி?'' என்றேன்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குப் பணம் வேணும். இல்லையேல் செல்ஃபோன் வேண்டும்'' என்றார். வாய் தகராறு முற்றியது. வீண் சண்டை வேண்டாம் என்று என் மனைவி பணம் தருவதாகக் கூறி, பின் கடன் வாங்கி ரூ.10,000 தண்டம் கொடுத்தோம். இப்போதெல்லாம் அடுத்தவர் செல்ஃபோனைத் தொடுவது ஏன்... பார்ப்பது என்றால்கூட மகனுக்கு அவ்வளவு அலர்ஜி...! சும்மாவா பத்தாயிரம் ரூபாய் கண்ணெதிரில் பறிபோய்விட்டதே!

- பா.ஜெயப்பிரகாஷ்

# "தயவுசெய்து அழைத்த எண்ணைச் சரிபாருங்கள்!"

...@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். உங்கள் செல்ஃபோனில் ஆகியவற்றோடு 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

# எமனுக்கே சவால்விடும் 108



# "பத்தே நிமிடங்களில் பறந்து வருவோம்!"

''108 அவசர கால ஆம்புலன்ஸ்... சொல்லுங்க ஸார்'' என்கிறார் ஆபரேட்டர். ''விபத்தா? எந்த இடம்? விழுப்புரம் பைபாஸா? கொஞ்சம் அப்படியே வெயிட் பண்ணுங்க'' என்றபடி கம்ப்யூட்டர் மானிட்டரில் மிக அருகில் ஆம்புலன்ஸ் எங்கிருக்கிறது என்று பார்க்கிறார். அதன் பாரா மெடிக்கல் உதவியாளரைத் தொடர்பு கொண்டு அவரையும் ஸ்பாட்டிலிருந்து பேசியவரையும் தொலைபேசியில் இணைக்கிறார். உதவியாளர் விபத்து நடந்த இடத்தைச் சரியாகக் கேட்டுச் சொல்ல... அடுத்த பத்தே நிமிடத்தில் ஆம்புலன்ஸ் விபத்து நடந்த இடத்தை அடைகிறது. விபத்து நடந்தது விழுப்புரம். சென்னை கஸ்தூரிபாய் அரசு மருத்துவமனையில் உள்ள ஆம்புலன்ஸ் கால் சென்டரிலிருந்து மின்னல் வேகத்தில் இந்தச் சேவை செயல்படுகிறது. அந்த அறையில் முப்பதுக்கும் மேற்பட்ட ஆபரேட்டர்கள் அமர்ந்து கொண்டு தமிழ்நாட்டின் பல இடங்களில் இருந்து வரும் எஸ்.ஓ.எஸ். கால்களை அட்டெண்ட் செய்து உயிர்களைக் காப்பாற்றுகிறார்கள்.

''தமிழ்நாட்டில் இத் திட்டம் 2008-ஆம் ஆண்டு, செப்டெம்பர் மாதம் அண்ணா பிறந்த நாள் அன்று செயல்படத் தொடங்கியது. இரண்டு வருட காலத்தில் சுமார் 26,000 உயிர்களை அவசரக் கால ஆம்புலன்ஸ் சேவை மூலமாகக் காப்பாற்றியிருக் கிறோம். முதல்வர் அவர்கள் இந்தத் திட்டம் செயல்படுவது குறித்து அவ்வப்போது கேட்டு, வழிகாட்டுகிறார்'' என்கிறார் மக்கள் நல்வாழ்வுத்துறை அமைச்சர் எம்.ஆர்.கே. பன்னீர்செல்வம்.

இத்திட்டத்தின்படி 385 ஆம்புலன்ஸ்கள் தமிழ்நாட்டில் இப்போது இயங்கிக் கொண்டு

இருக்கின்றன. இவை மாவட்டத் தலைமை மருத்துவமனை, தாலுகா மருத்துவமனை, ஊராட்சி ஒன்றிய அலுவலகங்கள், காவல் நிலையங்கள் ஆகிய இடங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றன. கால் சென்டரி லிருந்து தகவல் வந்தவுடன் சம்பவ இடத் துக்கு விரைந்து செல்கின்றன.

''இது வெறும் ஆட்களைக் கொண்டு போய் மருத்துவமனையில் சேர்க்கும் ஆம்புலன்ஸ் மட்டுமல்ல. ஆபத்திலிருக்கும் ஒருவரைக் காப்பாற்றத் தேவையான அறு பது சதவிகித அவசர மருத்துவ தேவைகள்







இந்த ஆம்புலன்ஸ்களில் இருக்கின்றன. அவற்றை உபயோகிக்க உதவியாள ருக்கு முழுப் பயற்சி கொடுக் கப்பட்டிருக்கிறது. விபத்தோ அல்லது ஹார்ட் அட்டாக்கோ... கோல்டன் நேரம் என்று சொல்லக்கூடிய முதல் அரை மணி நேரம் மிக முக்கியம். அந்த நேரத்தில் நோயாளியை ஆம்புலன்ஸில் ஏற்றி நாங்கள் சிகிச்சையைத் தொடங்கி விடுவோம். பின் னர் மருத்துவமனையில் சேர்த்தால் அவர்கள் சிகிச்சைகளைத் தொடர்வார்கள். இந்தச் செயல்பாடு காரணமாகத்தான் எங்களால் ஆயிரக்கணக்கான உயிர்களைக் காப்பாற்ற முடிந்திருக்கிறது'' என்கிறார் அமைச்சர்.

ஆக்ஸிஜன் வசதி, விஷம் குடித்தால் உடனடி மருத்துவம், மயக்கம், அதிக காய்ச் சல், தீக்காயம் போன்றவற்றுக்கு உடனடி நிவாரணம், அவசர ஊசி மருந்துகள், மாத்தி ரைகள் என்று எல்லாம் இந்த ஆம்புலன்ஸில் உண்டு. ஒவ்வொரு வகை நோயாளிகளை யும், விபத்தில் பாதிக்கப்பட்டவர்களை கொண்டு செல்ல வெவ்வேறு படுக்கைகள் உள்ளன. லேண்ட் லைன் உட்பட எந்த செல் ஃபோன் சேவை நிறுவன தொலைபேசி மற்றும் செல்பேசியிலும் 108ஐ இலவசமாக அழைக்கலாம்.

''இந்தத் திட்டம் அரசு - தனியார் கூட்டுற வில் இயங்குகிறது. பிரபல கட்டுமான நிறு வனமான ஜி.வி.கே. நிறுவனத்தின் இ.எம். ஆர்.ஐ. எமர்ஜென்ஸி மேனேஜ்மெண்ட் மற் றும் ரிசர்ச் இன்ஸ்டிடியூட் என்ற தொண்டு நிறுவனம்தான் அரசிடமிருந்து நிதி உதவி பெற்று இத்திட்டத்தை லாப-நஷ்டமின்றி நடத்துகிறது. நாள் ஒன்றுக்கு 30,000 அழைப்புகள் வருகின்றன. அதில் 25,000 அழைப்புகள் குறும்புத்தன மான ஏமாற்றும் கால்கள் என்பது வருத்தமளிக்கும் செய்தி. பொது மக்கள் எங்களுக்கு முழு ஒத் துழைப்பு கொடுக்க வேண்டும்'' என்கிறார் இ.எம்.ஆர்.ஐ. நிறு வனத்தின் தலைமை அதிகாரி ஸ்ரீவத்ஸன் ராகவன்.

''இந்த நிதியாண்டில் இத் திட்டத்துக்கு 60 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. கூடிய விரைவில் ஆம்புலன்ஸ்களின் எண்ணிக்கை 500 ஆகப் போகிறது. அவசர தேவைக்குப் பத்தே நிமிடங்களில் எந்த இடத்தையும் சென்றடையும் வகையில் இயக்கப் போகி றோம்'' என்கிறார் அமைச்சர் எம்.ஆர்.கே. பன்னீர்செல்வம்.

**- ப்ரியன்**

# ச்சோ ச்வீட்!

## வட்டமேஜை

'கவிதை கஃபே'வின் ஒவ்வொரு கவிதையும் யோசிக்கவும், நேசிக்கவும் வைக்கின்றன. அதுவும் கவிதைகளின் பின்னணியில் இடம் பெற்றிருக்கும் ஓவியம் ச்சோ ச்வீட்!

- ஜி.எம்.மஞ்சரி, கிருஷ்ணகிரி

மூன்றாம் பரிசு பெற்ற பொம்மை(ய) சாமி சிறுகதையை, வெறும் கதையாகப் பார்க்க முடியவில்லை.

- ஜி.சுந்தர ராஜன், விருதுநகர்

ஓ பக்கங்களை வாசகர்கள் நாங்க 'ஓ' போட்டு வரவேற்கிறோம்.

- எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

நரேஷ் குப்தா, 'உண்மையை எழுதினால் பிரச்னை வரும்' என்று சொன்ன செய்தி மனத்துக்கு வேதனையளித்தது.

- த.புகழேந்தி, கூகூர்

அகிலா கார்த்திகேயனின் ஐ.எஸ்.ஓ. 9001 படித்துக் கண்களில் நீர் பனித்தது. கிராமங்களில் உள்ள பல கோயில்கள் பராமரிப்பின்றி இடிந்தே காணப்படுகின்றன. இனியாவது அரசும், இந்து சமய அறநிலையத்துறையும் விழித்துக் கொள்ளுமா?

- என்.காளிதாஸ், சிதம்பரம்

கோலிவுட்டிலிருந்து 'சின்' கோபால், இனி அம்மாக்கள் ஆட்சிதான் என்று 'சின்'காட்டுகிறாரே எங்கே? கோலிவுட்டிலா? கோட்டையிலா?

- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

'கோலாகல கோனியம்மன்' இணைப் பிதழ் பக்திப் பரவசத்தில் மூழ்கச் செய்தது.

- எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி

ஆடித் தள்ளுபடியில் மிஞ்சுவது தள்ளு இடிதான் என ராதிகா கிருஷ்ணனின் விமர்சனம் சிரிப்பை வரவழைத்தது.

- கே.வி.ராமன், சேலையூர்

அப்பாவின் சுயநல எண்ணத்துக்கு, அவர் உயிருடன் இருக்கும் வரை அடிபணியாமல், இறந்த பிறகு செயல்படுத்திய ரீனா ஐ.ஏ.எஸ். இன்றைய தலைமுறையின் பிரதிபலிப்பு.

- ம.ராஜேஸ்வரி, ஜாபர்கான்பேட்டை

### ஆன்மிகச் செய்தி

கீழ்வேலூர் வடகடமன்குடி, ஸ்ரீ விநாயகர், ஸ்ரீவிசாலாக்ஷி சமேத ஸ்ரீவிஸ்வநாதர், ஸ்ரீஸ்ரீதேவி, ஸ்ரீபூதேவி சமேத ஸ்ரீவரதராஜப் பெருமாள், ஸ்ரீகாமாக்ஷியம்மன், ஸ்ரீ மஹா சாஸ்தா, ஸ்ரீவீரன்... ஆலயங்களின் அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் ஆவணி மாதம் 4-ம் தேதி, 20.8.2010 வெள்ளிக்கிழமை, காலை மணி 7.45க்குள் நடைபெறுகிறது. பக்தகோடிகள் யாவரும் கலந்துகொண்டு எல்லா தெய்வங்களின் அருளாசிப்பெற கேட்டுக் கொள்கிறோம்.

- திருப்பணிக்குழு

என்றும் உங்களுடன்

மங்கையர் மலர்

VBC Jewellery
HOUSE OF VUMMIDI

இணைந்து வழங்கும்

# 'வைர மங்கை'

-சிறப்பு சந்தா திட்டம்!*

கல்கி நிறுவனத்தின் மற்றொரு வெளியீடான, தரத்திலும் நம்பர் ஒன் மகளிர் மாத இதழ் மங்கையர் மலர் ஆகஸ்ட் இதழில், 'வைர மங்கை' - சிறப்பு சந்தா திட்டம் (பக்கம் 187) பற்றிய அறிவிப்பு வெளியானது. இத்திட்டத்தின்படி எந்த ஒரு நபரும் மங்கையர் மலருக்கு சந்தா கட்டி, ஐந்து முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தலாம். அப்படி அறிமுகப்படுத்துபவர் பவள மங்கை என்ற பட்டம் பெறுவார். பவள மங்கைக்கும் (ரூ.250/- மதிப்புள்ள) முத்து மங்கைகளுக்கும் (ரூ.100/- மதிப்புள்ள) பரிசுக் கூப்பன்கள் அந்த மாத இறுதிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

ஒவ்வொரு மாதமும் குறைந்த பட்சம் முப்பது முத்து மங்கைகளை அறிமுகப்படுத்துவதன் மூலம், பவள மங்கையிலிருந்து பதவி உயர்வு பெற்று மரகத மங்கை என்ற மகுடம் சூட்டப்படும்.

இவ்வாறு முப்பது சந்தாதாரர்களை அறிமுகப்படுத்தும் முதல் இருபது அதிர்ஷ்டசாலிகளின் புகைப்படம் அடுத்து வரும் மங்கையர் மலர் இதழில் வெளியாகும். கூடவே 'வைர மங்கை' பம்பர் பரிசுக் குலுக்கலில் கலந்து கொள்ளவும் அவர்கள் தகுதி பெறுவார்கள்.

'கல்கி' நிறுவனத்தின் மற்றொரு வெளியீடான நமது மங்கையர் மலர் இதழின் அன்புவட்டம் விரிவடைய வேண்டும் என்ற நோக்கத்துடன் கொண்டு வரப்பட்ட இத்திட்டத்துக்கு, வாசகியரின் ஏகோபித்த வரவேற்பைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறோம். கல்கி வாசகர்களையும் இத்திட்டத்தில் கலந்து கொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

நீங்களும் வைர மங்கை ஆகணுமா? அதற்கான கூப்பன் அடுத்த பக்கத்தில்...

(ஆர்)

மேலும் விவரங்களுக்கு
**94443 83465 / 99400 73736**

இத்திட்டத்தில்
மும்முரமாக இறங்கி முப்பது
முத்து மங்கைகளை அறிமுகப்படுத்தி,
நான்காவது மரகத மங்கையாக உயர்ந்த
அலமேலு ஸ்ரீநிவாசன் இதோ...

பிரியமுள்ள ஆசிரியருக்கு வணக்கம். மங்கையர் மலரின் ஆரம்ப கால வாசகி நான். என் அம்மா, மங்கையர் மலரை, பெண்களுக்கு உபயோகமான பத்திரிகை என்று அறிமுகம் செய்து வைத்தார். குழந்தை வளர்ப்பு முதல் குடும்ப உறவுகள்வரை அத்தனை விஷயங்களையும் பொக்கிஷமாய் பாதுகாத்து வைத்திருக்கிறேன். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்பதுபோல் மங்கையர் மலரால் பெற்ற இவ்வின்பத்தை அனைவரிடமும் கொண்டு செல்ல நினைத்தேன்... முடிப்பேன்... ஜெயிப்பேன்.

**- அலமேலு ஸ்ரீநிவாசன்**

## மங்கையர் மலர் - VBC இணைந்து வழங்கும் 'வைர மங்கை' சிறப்பு சந்தா திட்டம்

அன்பு அனுராதா நடராஜனுக்கு, பவள மங்கையான நான் (தற்போதைய மங்கையர் மலர் வாசகி), மங்கையர் மலரை, 5 முத்து மங்கைகளுக்கு அறிமுகப்படுத்துகிறேன். தாங்கள் கொடுத்துள்ள இந்த படிவத்தை முழுமையாகப் பூர்த்தி செய்து, 5 ஓராண்டு சந்தாதாரர்களின் தொகையாக, ரூ.1250/- மங்கையர் மலர் என்ற பெயரில் டி.டி/M.O மூலம் இணைத்துள்ளேன். என்னுடைய 5 முத்து மங்கை தோழிகளுக்கும், மங்கையர் மலர் இதழை அடுத்த மாதத்திலிருந்து அனுப்பி வைக்கவும். எனக்கும் என் தோழிகளுக்குமான பரிசுக் கூப்பன்களையும் அனுப்பி வைக்கவும். மேலும் பல முத்து மங்கைகளை அறிமுகப்படுத்த என்னால் இயன்றவரை முயலுகிறேன்.

**பவள மங்கை**

எனது பெயர் :..........................................

முகவரி:..........................................

..........................................

..........................................

சந்தா எண்: (தாங்கள் சந்தாதாரராக இருந்தால்)

..........................................

ஃபோன்: ..........................................

ஈமெயில்..........................................

**நான் அறிமுகப்படுத்தும் முத்து மங்கைகள்:**

கல்கி

1. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

ஃபோன்:..........................................

ஈமெயில்..........................................

2. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

ஃபோன்:..........................................

ஈமெயில்..........................................

3. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

ஃபோன்:..........................................

ஈமெயில்..........................................

4. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

ஃபோன்:..........................................

ஈமெயில்..........................................

5. பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

ஃபோன்:..........................................

ஈமெயில்..........................................

உறையின் மீது 'வைர மங்கை' என்று குறிப்பிட்டு அனுப்பவும்

இப்படிக்கு

**அனுப்ப வேண்டிய முகவரி**

*மங்கையர் மலர் சந்தா பிரிவு, மங்கையர் மலர்,*
*கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,*
*ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032*

தேதி:..........................................



# ஆத்திரப்படாதே சகோதரா!

**அரசுடன் இணைந்து, 108 ஆம்புலன்ஸ் சேவை வழங்கும் ஜிவிகே ஈ எம் ஆர் ஐ நிறுவனத்தின் மண்டல மேலாளர் பிரபுதாஸ் கூறும் 108 ஆம்புலன்ஸ் சேவை குறித்த சில முக்கியமான டிப்ஸ்:**



* பிரபுதாஸ்

❑ தமிழ்நாட்டின் எந்த மூலையிலிருந்தும் நீங்கள் 108க்கு ஃபோன் செய்யலாம். சேவை தேவைப்படும் இடத்துக்குச் சீக்கிரமாக வருவதற்கு அவசியமான அத்தனை தகவல்களையும், ஃபோன் எண்ணையும் கொடுங்கள்! 'இங்கே ஆளு சாவக் கிடக்கறப்போ கேள்வி மேல கேள்வியா கேக்கறியா'ன்னு எரிச்சல் படாதீர்கள்.

❑ சாலை விபத்து நடந்தால் பாதிக்கப்பட்டவர்களை ஆட்டோ, கார், பஸ்... என அகப்பட்ட வாகனங்களில் ஏற்றி ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைக்காதீர்கள். ஆம்புலன்ஸ் வருகைக்காகக் காத்திருப்பதுதான் புத்திசாலித்தனம். காரணம், ஆம்புலன்ஸில் ஆஸ்பத்திரிக்குப் போகிற சமயத்திலேயே உயிர் காக்க அவசியமான முதலுதவி அளிக்கப்படுகிறது.

❑ சாலை விபத்துக்கள் நடக்கும் இடங்களுக்குச் செல்லும் ஆம்புலன்ஸ் ஊழியர்களே சில சமயங்களில் ஆபத்தைச் சந்திக்க வேண்டியுள்ளது. கார், பஸ், லாரி... போன்ற வாகனங்கள் மோதி விபத்து ஏற்படும்போது அங்கே உள்ளூர் மக்கள் ஆவேசத்துடன் கூடி, சம்பந்தப்பட்ட வாகனங்கள் மீது கல் வீசுவது, உடைத்துச் சேதப்படுத்துவது போன்ற வன்முறைகளில் ஈடுபடுகிறார்கள். சில இடங்களில் உதவச் செல்லும் ஆம்புலன்ஸ்களையும் அவர்கள் தாக்குகிறார்கள். விபத்தில் அடிபட்டவர்களின் உயிரைக் காப்பாற்றச் செல்லும் ஆம்புலன்ஸ் ஊழியர்களைத் தாக்குவது எந்தவிதத்தில் நியாயம்?

❑ பாதிக்கப்பட்டவர்களை அழைத்துக் கொண்டு செல்லும்போது ஆம்புலன்ஸ்களில் சைரன் ஒலிப்பது சரி. ஆனால் பாதிக்கப்பட்டவர்கள் உள்ளே இல்லாதபோதுகூட ஏன் சைரன் அலற வேண்டும்? என்று சிலர் கேட்கிறார்கள். பாதிக்கப்பட்டவரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் செல்ல வேண்டியது எத்தனை அவசரமோ அதே போலத்தான் விபத்து ஸ்பாட்டுக்கு ஆம்புலன்ஸ் சென்றடைய வேண்டியதும் முக்கியம். அதனால்தான் சைரன் ஒலி!




**- மௌலி**



...பேச்சு *



* இசையான...

### பவுண்டரியைத் தாண்டி...

'ஸ்வானுபாவா' என்ற மாணவர்களுக்கான இசை திருவிழா கடந்த இரண்டு ஆண்டுகளாக சென்னையை கலக்கியது. இவ்வாண்டின் முன்னேற்றம், லைவ் வெ காஸ்ட்! நிகழ்ச்சிகள் நடந்துகொண்டே இருக்கையி வீட்டிலிருந்தே (அல்லது பள்ளி/கல்லூரியிலிருந்தே இலவசமாகக் கண்டு/கேட்டு/கற்று மகிழ வாய்ப் அளிக்கப்பட்டது. சினிமாவில் இசை என்றொரு தலை பில் எஸ்.பி.பி.யும் ராஜீவ் மேனனும் பேசியது பொருத்த தான். சினிமாவில் நகைச்சுவை என்ற தலைப்பு எதற்கு... கர்நாடக சங்கீத ரசிகர்களான ஏ.ஆர்.எஸ்.ஸையும் கிரே மோகனையும் வரவழைப்பதற்காக பவுண்டரியை உற்சா மாகத் தாண்டிப் போனார்களோ?

## கலா உலா

# மெரினா பீச்சுக்கு இடம் மாறட்டும்!



* அக்ஷர லட்...

விட்டல்தாஸ் மஹராஜ் ஜெயகிருஷ்ண தீக்ஷிதரின் நிகழ்ச்சியும் இவ் வாண்டு லைவ் வெப்காஸ்ட் ஆயிற்று. பத்துநாள் நிகழ்ச்சியையும் நேர் அலையாய் இணையத்தில் காண வும் அதன் ஆவணப் பதிவை (ஆர்கைவ்ஸ்) அனுபவிக்கவும் ஐந்நூறு ரூபாய் கட்டணம். ஒரு லட்சம் பேர் கட்டணம் செலுத்திப் பதிவுசெய்து கொண்டார்கள் என்பது செய்தி. ''நல்ல செய்திதான்; அதற்காக நேரில் வராமல் இருந்துவிடாதீர்கள். இணையத்தில் நீங்கள் என்னைப் பார்க்கலாம். ஆனால், நான் உங்களைப் பார்க்க முடியாதே!'' என்று நிகழ்ச்சியில் கேட்டுக் கொண்டார் தீக்ஷிதர். காமராஜ் அரங்கமே கொள்ளாத கூட்டம். தீக்ஷிதரை வாழ்த்திப் பேசிய சகா துகாராம் கணபதி மஹராஜ், ''இனி இந்த நிகழ்ச்சி மெரினாவுக்கு இடம் மாறட்டும்!'' என்று ஐடியா கொடுத்தார்!

## ஷேரா? டபுளா?

**டி**சம்பரில் வழங்கப்போகும் சங்கீத கலாநிதி பட்டத்துக்கான தேர்வை ஜூலை மாதமே அறிவித்துவிடுகிறது மியூசிக் அகாடமி. இந்த ஆண்டு, சர்ச்சைகளுக்கு அப்பாற்பட்ட சரோஜா-லலிதா சகோதரிகள் சேர்ந்து பெறுகிறார்கள். பட்டத்துக்குரிய பரிசுத் தொகையாக ஹிந்து நாளிதழ் வழங்கும் ஒரு லட்சம் ரூபாயை, மும்பாய் சகோதரிகள் சமர்த்தாக ஷேர் பண்ணிக் கொள்ள வேண்டுமா? அல்லது டபுள் பண்ணித் தருவார்களா?



* சர்ச்சைகளுக்கு அப்பால்

## இணையாகாது இணையதளம்!

**வ**யதிருக்கும்போதே விருதைக் கொடுத்துவிடுவது என்ற கொள்கைக்குக் கடந்த சில ஆண்டுகளாக மாறியிருக்கிறது ஸ்ரீ கிருஷ்ணகான சபா. இந்த ஆண்டு சங்கீத சூடாமணி விருதை சௌம்யாவுக்கு வழங்கியது. விழாவில் பேசிய மூத்த வித்வான் டி.ஆர்.சுப்ரமண்யம், குருகுலவாச முறையில் நல்லதைவிடக் கெடுதலே அதிகம் என்ற ரீதியில் பேசி, இன்றைய நவீன ஸ்கைப் கிளாஸ்களைச் சிலாகிக்கப்போக, இளைய தலைமுறையைச் சேர்ந்த சௌம்யா அதை மறுத்துப் பேசியிருக்கிறார். தமது குரு, பேராசிரியர் எஸ்.ராமநாதனிடம் செய்த குருகுலவாசம் தம்மை எப்படி உருவாக்கியது என்று விவரித்திருக்கிறார். இத்தனைக்கும், சௌம்யா முக்கிய பொறுப்பு வகிக்கும் கர்நாடிகா அமைப்பு, இணையதளம் மூலம் வகுப்புகள் நடத்துவதில் முன்னணியில் இருக்கிறது. குருகுலம் சாத்தியமில்லாத சூழலில்தான் கம்ப்யூட்டர் அனுகூலம்; குருமுகமான பயிற்சிக்கு அது இணை ஆக முடியாது என்பதை நிர்ணயமாகச் சொன்ன சௌம்யாவுக்கு இன்னொரு விருது கொடுத்தால் என்ன?

* குருகுல வார்ப்பு

- சாயா

நிவேதனம்

# ருசி சொல்லும் சேதி!

நிவேதனம் என்பதன் அடிநாதமான பேரன்பு புலப்படும் பவித்திரமான அந்த அன்பைத்தான், பரமன் ஏற்கிறான் அதனால்தான், பல்வேறு தலங்களிலும் பலப்பல நிவேதனங்கள்!

ஸ்ரீநிவாச ராகவன்

நாச்சியார் கோவில் கருடன்

**பி**ரசவ வேளை! தாயின் வரவை எதிர்நோக்கிக் காத்துக்கொண்டிருக்கிறாள் அந்தப் பெண். ஆனால், தாயோ ஆற்றின் மறுகரையில் தவித்துக்கொண்டிருக்கிறாள். காரணம், ஆற்றில் பிரவகித்துக் கொண்டிருந்த பெரு வெள்ளம்! அதே சமயம், கர்ப்பிணிக்குத் துணையாக வந்து, குழந்தைப்பேற்றைச் சிக்கலில்லாமல் பார்த்துக்கொண்டாள். அந்தப் பெண்ணின் தாய் வடிவில் வந்த அம்பிகை. 'சூலிகாம்பாள்' என்று இந்தத் தேவியைச் சொல்கிறார்கள்.

'சூல் (கரு) காத்த அம்மன்' என்பதன் மரூஉ என்பது போலத் தோன்றுகிறது. இந்தப் பெயரில் மயிலாடுதுறை அருகிலுள்ள திருச்செங்காட்டங்குடியில் தனிக்கோயில் கொண்டிருக்கிறாள் இந்த அம்பிகை. இந்த அம்பிகைக்கு, நாள்தோறும் இரவில் சம்பா

'**இ**றைவனுக்குப் பசி, தாகம் ஏது? ஆணல்லன், பெண்ணல்லன், அல்லால் அலியுமல்லன்; உளனல்லன், இல்லையல்லன்... என்றெல்லாம் சொல்லிவிட்டு, நிவேதனம் என்று செய்வது எந்த வகையில் சரி?' இந்தக் கேள்வியை எதிர்கொள்வது மிகச் சிரமமான விஷயம். ஆம்; ஆண்டவனுக்குப் பசியும், தாகமும் வராதுதான். ஆனால், 'பரிந்து, உவந்து, பக்கம் வந்து அருள்பவனுக்குத் தராமல், நாம் மட்டும் புசிப்பது தவறு' என்று உருகுகின்ற பேருள்ளத்தின் நிலையில் இருந்து பார்த்தால்தான்,

சாதம் நிவேதனம் செய்கிறார்கள். அதாவது, மிளகு, சீரகம், உப்பு, நெய் கலந்த சம்பா அரிசிச் சாதம்! குழந்தைப்பேறு கைகூடவும், சுகப் பிரசவம் நடக்கவும் இந்தத் தேவியைப் பிரார்த்திக்கிறார்கள் பக்தர்கள்.

இங்குள்ள ஆலயத்துக்கு 'கணபதீஸ்வரம்' என்று பெயர். வாதாபியில் இருந்து பிள்ளையார் விக்கிரகத்தை பரஞ்சோதி கொண்டு வரும் முன்பே, இங்கே சிவபிரான் கோயில் கொண்டிருந்தார். கஜமுகாசுரனை வதம் செய்த விநாயகர், சிவனைப் பூஜித்த தலம் இது.

திருமாலிருஞ்சோலை என்னும் அழகர் கோயிலில், 'அக்கார அடிசில்' விசேஷமான நிவேதனம். 'குழலழகர், வாயழகர், உந்தியிலே எழு கமலப் பூ அழகர்...' என்று, அழகனின் பேரழகில் தோய்ந்து பாடுவாள் ஆண்டாள் நாச்சியார். இந்தப் பெருமாளுக்கு நூறு தடா (அண்டா) அக்கார அடிசில் நிவேதனம் செய்ய வேண்டும் என்பது அவளின் திருவுள்ளம்.

பிற்காலத்தில், எம்பெருமானார் உடையவர் என்றெல்லாம் கொண்டாடப்படும் ஸ்ரீமத் ராமானுஜர், அந்த விருப்பத்தை நிறைவேற்றினார். தங்கையின் விருப்பத்தை நிறைவேற்றுபவன் தமையன் அல்லவா? அதனால், 'அண்ணா' என்று அவரை அழைத்தாளாம் சிலா ரூபத்திலிருந்து. அதனால், 'கோயிலண்ணர்' என்று ராமானுஜருக்குப் பெயர் உண்டு.

திருமுட்டம் எனப்படும் ஸ்ரீமுஷ்ணத்தில், பூவராக ஸ்வாமி அருள் பாலிக்கிறார். இரண்டு கைகளையும் இடுப்பில் ஊன்றியவராக பெருமாள் தருகின்ற தரிசனம் அற்புதம். இவருக்கு, கோரைக்கிழங்கு நிவேதிப்பார்கள். நிலத்தின்கீழ் உள்ள கிழங்குகளைக் கெல்லி எடுத்து உணவாக்கிக் கொள்ள, கூர்மையான தெற்றிப் பல் கொண்டது காட்டுப்பன்றி. அதைப் போன்ற திருமுகம் கொண்ட பகவான், தம் அடியவர்களைப் பிடிக்கும் முன்வினை என்னும் கிழங்குகளைக் கெல்லியெடுத்து விடுகிறான். அதனால், அவர்கள் பிறவிக்குக் காரணமான வினைகளில் இருந்து விடுபடுகிறார்கள்; பிறவா நிலை என்னும் மோட்சத்தையும் அடைகிறார்கள்.

'வானரங்கள் கனிகொடுத்து மந்தியோடு கொஞ்சு'கின்ற திருக்குற்றாலத்தில், தரிசனம் அருள்கிறார் குறும்பலா ஈசர். எப்போதும் சாரல் விழுந்துகொண்டே இருக்கின்ற இடமல்லவா இது? அதனால், திருமேனி நலிவடையக் கூடாதே என்பதைப் போல, பெருமானுக்கு இங்கே சுக்குக் காபி நிவேதனமாகிறது.

இங்கு மட்டுமல்ல; கோலாபுரம் என்னும் கொல்லூரிலும் மூகாம்பிகைக்குச் சுக்குக் கஷாயம் நிவேதனம் உண்டு.

மாணிக்கவாசகப் பெருமானை,


அழகர் கோவில்

சிவபிரான் ஆட்கொண்ட தலமான திருப்பெருந்துறை என்னும் ஆவுடையார் கோயிலில், புழுங்கலரிசி சாதமும், பாகற்காயும் நிவேதிக்கப்படுகின்றன. அதைப் போன்றே, பரமக்குடி அருகிலுள்ள இளையாங்குடியில், கைக்குத்தல் அரிசிச் சாதமும் கீரையும் நிவேதனம். இளையான்குடி மாறநாயனாரைச் சோதிக்க, இரவு நேரத்தில், மழை கொட்டும் சமயத்தில் வந்தார் சிவபிரான். வீட்டில் ஒன்றுமில்லை. தம் வயலில் விதைத்திருந்த நெல்லைக் கூடையில் வாரிவந்து, கழுவி, வறுத்து, உமி நீக்கி, உணவு தயாரித்தார். கொல்லையில் விளைந்திருந்த கீரையை வதக்கினார். வந்த அடியாருக்கு உணவிட்டார். அதன் அடையாளமாகவே, இன்றும் இந்த நிவேதனம்.

மாறாக, காஞ்சியின் வரதராஜப் பெருமாளுக்கு நிவேதனம் இட்லி. கடல்மல்லையில் தலசயனம் கொண்டுள்ள பெருமாளுக்குத் தயிர்சாதம்; கோவிலடி என்னும் தலத்திலுள்ள பெருமாளுக்கு 'அப்பக் குடத்தான்' என்றே திருநாமம். பெயருக்கு ஏற்ற மாதிரி, நிவேதனமும் அப்பம்தான். திருவிண்ணகர் என்னும் உப்பிலியப்பன் கோவிலில், உப்பே இல்லாமல் நிவேதனம். என்ன தயாரித்தாலும் உப்பில்லாமல்தான். அது புளியோதரையாய் இருந்தாலும் சரி; உப்பின் சகவாசமே கிடையாது.

புகழ்பெற்ற சௌரிராஜப் பெருமாள் எழுந்தருளியுள்ள தலம், திருக்கண்ணபுரம். இது பஞ்ச கிருஷ்ணத் தலங்களில் ஒன்று. கபிஸ்தலம், திருக்கண்ணமங்கை, திருக்கோவிலூர், திருக்கண்ணங்குடி... ஆகியவை பிற தலங்கள். இந்தக் கண்ணபுரத்துக்கு வந்து சேர்ந்தான் கிண்டல்காரனான காளமேகம். அது மழைநேரம். அவனை உள்ளே விட மறுத்துவிட்டார்கள் பட்டர்கள். உடனே அவன் பாடினான்:


போட்டியில் தோற்ற காளி. ஆவுடையார் கோவில்

'கண்ணபுர மாலே கடவுளிலும் நீயதிகம்'. முதல் வரியைக் கேட்டவுடன், கதவைத் திறந்து அவனை உள்ளே அனுமதித்தார்கள். அடுத்துச் சொன்னான் அவன்: 'உன்னிலும் நான் அதிகம்'. அதிர்ந்து போனார்கள் பட்டர்கள். எப்படி என்று அவன் விளக்கமும் கொடுத்தான்: 'நீயாவது பத்து அவதாரங்கள்தான் எடுத்தாய். நானோ மீண்டும் மீண்டும் பிறந்துகொண்டே இருக்கிறேன். அப்படியானால், உன்னைவிட நான் பெரியவன் என்பதில் என்ன தவறு?' நியாயமான கேள்விதானே?

இந்தக் கண்ணபுரப் பெருமாளுக்கு, விசேஷமான நிவேதனம் 'முனையதரையன் பொங்கல்'. அந்தப் பெயர் கொண்ட பக்தர், பகவானுக்கு நிவேதித்த பொங்கல், அரிசி, பருப்பு, உப்பு மூன்றும் கலந்தது.

அந்தப் பொங்கலைச் சாப்பிட்டான். தாம் சாப்பிட்டதற்கு அடையாளமாய் இதழோரமாய்க் கொஞ்சம் பொங்கலையும் துடைக்காமல் விட்டிருந்தான். மறுநாள் காலை, விஷயம் அறிந்த பட்டர் ஆச்சர்யப்பட்டார். அதனால், இன்றும் திருக்கண்ணபுரத்தின் விசேஷ நிவேதனம் முனையதரையன் பொங்கல்!

**பெருமானின் திருமேனி நலிவடையக் கூடாதே என்பதைப் போல, திருக்குற்றாலத்தில் சுக்குக் காபி நிவேதனமாகிறது.**

புல்லாரண்ய க்ஷேத்திரம் என்று சொல்லப்படுவது திருப்புல்லாணி. ஆதி ஜகந்நாதன் என்பது மூலவரின் திருநாமம். இலங்கைக்குப் புறப்படும் முன்பு, சமுத்திர ராஜனின் உதவி வேண்டி, ராமன் தர்ப்பத்தில் தவமிருந்த இடம் இது. அதனால், ஆதிசேது என்றும் சொல்வதுண்டு.

இந்த ஜகன்னாதப் பெருமாளுக்கு, திருக்கண்ணமுது என்னும் பாயசம் நிவேதனம். அமுத கலசத்தோடு நிவேதனத்தை



நிறைவு செய்வோம். திருநறையூர் என்னும் நாச்சியார் கோவிலில், கருடனுக்கு விசேஷமான நிவேதனம் 'அமுத கலசம்' என்னும் கொழுக்கட்டைதான். அதைப் போலவே, திருநெல்வேலியில் இருந்து 12 கி.மீ தொலைவில் உள்ள கோடகநல்லூரில் எழுந்தருளியுள்ள பிருஹந் மாதவன் பெருமாளுக்கும் 'அமுத கலசம்' நிவேதனம் சிறப்பானது.

ஒரு விஷயம் ஆச்சர்யமானது. புழுங்கல் அரிசிச் சாதம் முதல் பொங்கல், சுக்குக் கஷாயம் என்று அனைத்துமே இறைவனுக்கு நிவேதனமாவதில் என்ன புரிகிறது? 'உண்ணும் உணவைப் பொறுத்தே, உன்னுடைய எண்ணமும் செயல்களும் அமைகின்றன. அதனால், உணவை அளவறிந்து உண். பிடித்தது என்பதற்காக, அதிகமாகச் சாப்பிட்டு வயிற்றை அடைக்காதே. பிடிக்கவில்லை என்று ஒன்றைப் புறக்கணிக்காதே. குறிப்பாக, நாக்குக்கு-ருசிக்கு, அடிமைப்படாதே. நாகாக்க என்று வள்ளுவன் சொன்னது ருசியையும் சேர்த்துத்தான் என்று அறிவுறுத்துகின்றன நிவேதனங்கள்.

(அடுத்த இதழில் திருவிழா)

"108 அவசர ஆம்புலன்ஸ் சேவை அவசியமான திட்டம் என்பதில் சந்தேகமில்லை. நான் அன்றாடம் பணியில் ஈடுபடும் மருத்துவர் என்பதால், 108-ன் மூலம் மக்கள் பயனடைவதை நன்கு உணர்ந்திருக்கிறேன். அதே சமயம் இந்தத் திட்டப்படி பாதிக்கப்பட்டோர் மருத்துவமனை வருவதற்கான ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதே தவிர, ஆபத்திலிருப்பவரைக் காப்பாற்றுவதற்கு இன்னமும் நிறைய செய்ய வேண்டும்'' என்கிறார் தமிழ்நாடு பா.ஜ.க.வின் துணைத் தலைவர் டாக்டர் தமிழிசை சௌந்தர்ராஜன்.

''முதலில் ஆம்புலன்ஸ் ஓட்டுனரோடு வரும் பாரா மெடிக்கல் உதவியாளர் அவசர மருத்துவத் தேவைகளைச் செய்யுமளவுக்கு,

# CALL 108-ன் அவசரத் தேவை!

பயிற்சி பெற்றிருக்கிறாரா என்பது தெரியவில்லை. ஆனால், அந்த ஆம்புலன்ஸில் அவசரத் தேவைக்கான மருந்துகள் வைக்கப்பட்டிருந்தாலும், அந்த உதவியாளர்கள் அவற்றைப் பயன்படுத்துவதற்குத் தயக்கப்பட்டு அருகிலிருக்கும் ஏதாவது ஒரு மருத்துவமனைக்கு நோயாளிகளைக் கொண்டு சேர்த்து விடுவதில் முனைப்பு காட்டுகிறார்கள். சில உதவியாளர்கள் கடமையைச் சரிவரச் செய்யக்கூடும். என்னிடம் மக்கள் சொன்னக் குறைகளைத்தான் இங்கு சொல்கிறேன். எனவே, நன்கு பயிற்சி பெற்ற பாரா மெடிக்கல் உதவியாளர்கள் எல்லா ஆம்புலன்ஸ்களிலும் இருந்தால் மட்டும் போதாது. அவர்கள் தயங்காமல் அவசர மருத்துவ தேவைகளைச் செய்யும் அளவுக்கு பயிற்றுவிக்கப்பட்டிருக்க வேண்டும்!



● மைத்ரேயன்

அதேபோல பெரும்பாலான மக்கள் வறுமைக் கோட்டுக்கு கீழே உள்ள நிலையில், 108ல் வரும் ஆபத்தில் இருப்பவரை உடனடியாகக் கவனிக்கும் வகையில், அடிப்படைத் தேவைகளுடன் மருத்துவமனைகள் இருக்கின்றனவா என்றும் பார்க்க வேண்டும். துணை, ஆரம்ப சுகாதார நிலையங்கள், தாலுக்கா மருத்துவமனைகள், ஏன் மாவட்ட



● தமிழிசை சௌந்தர்ராஜன்






மருத்துவமனைகள்கூட இன்னமும் அவசரத் தேவையை ஈடுகட்டும் அளவுக்கு மருத்துவக் கட்டுமானங்களுடன் இல்லை.

எனவே, இவற்றைப் பலப்படுத்தாமல் விட்டால் 108ல் வருகிறவரின் கதி என்ன? சில மாதங்களுக்கு முன்னர் நெல்லை மாவட்டம் ராதாபுரம் அருகில் 108ல் அழைத்துச் செல்லப்பட்ட ஒருவர், சரியான மருத்துவ வசதி இல்லாததால் பல மருத்துவமனைகளுக்கு அலைக்கழிக்கப்பட்டார் என்று சொன்னார்கள். தேசிய ஊரக சுகாதார இயக்கம் மூலம் ஆயிரக்கணக்கான கோடிகள் மாநிலங்களுக்கு வழங்கப்படுகிறது. இந்த நிதி வசதியில் கிராம அளவில் உள்ள மருத்துவமனைகளைக்கூட சகல வசதிகளுடன் வைத்துக்கொள்ள முடியும். ஊரகப் பகுதிகளில் 24 மணி நேரமும் டாக்டர்களின் சேவை கிடைப்பதற்கு அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும். கிராமங்களில் பணிபுரியும் டாக்டர்களுக்குக் கூடுதல் சம்பளம், ஊக்கத் தொகை கொடுப்பதன் மூலம், அவர்கள் சேவையை 24x7 பயன்படுத்திக் கொள்ள முடியும்'' என்கிறார் தமிழிசை சௌந்தர் ராஜன்.

108ன் செயல்பாடு பற்றி அ.இ.அ.தி.மு.க. ராஜ்ய சபை உறுப்பினர் டாக்டர் மைத்ரேயனிடம் கேட்டதற்கு, ''பொறுங்கள்... இது தொடர்பாக எங்கள் அம்மா தேர்தல் அறிக்கையில் சொல்வார்'' என்று சுருக்கமாக முடித்துக் கொண்டார்.

-ஸ்ரீநி



# மூலதன மந்திரம்

**நான் பி.காம் பட்டதாரி. என்னிடம் இருக்கும் சிறு முதலீட்டைப் போட்டு மளிகை ஸ்டோர் தொடங்கலாம் என்ற எண்ணம் இருக்கிறது. வங்கியில் எனக்கு லோன் உதவி கிடைக்க என்ன செய்யணும்?**

**- கே.பி.துரைராசன், வயலூர்**

முன் அனுபவம் ஏதுமின்றி புதிதாக நீங்கள் தொழில் துவங்கக் கடன் கேட்கும் போது வங்கிகள் கடன் தருவதற்கு உங்களுடைய சொத்துகளை அடமானமாகக் கேட்கவோ அல்லது ஒரு தனி நபர் கியாரண்டி கேட்கவோ வாய்ப்புள்ளது. தொழில் தொடங்கிச் சில ஆண்டுகள் லாபகரமாக நடத்தியும், வருமான வரி தொடர்ச்சியாகச் செலுத்தியும் ஒரு ட்ராக் ரிக்கார்டு உண்டு பண்ணிவிட்டீர்கள் என்றால் கடையில் உள்ள ஸ்டாக்குகள் (வியாபாரத்துக்கு வைத்திருக்கும் சரக்குகள்) மீதான அடமானத்தைக் கொண்டே உங்களுக்குக் கடன் கிடைக்கும். லாபகரமாகத் தொழில் நடத்தினால் மட்டும் போதாது, லாபம் சம்பாதித்ததற்குச் சாட்சியாக வருமான வரி கட்டினால்தான் வங்கியில் லோன் கிடைக்கும்.

**பேங்க் ஸேஃப்டி லாக்கரில் தங்கத்தை மட்டும்தான் பாதுகாக்க முடியுமா... அதன் நடைமுறைகள் என்ன?**

**-ஜான் பிரிட்டோ, துவரவயல்**

பேங்க் ஸேஃப்டி லாக்கரில் தங்கம், வைரம், ப்ளாட்டினம், பணம், முக்கிய ஆவணங்கள், சொத்துப் பத்திரங்கள் என அனைத்து விலையுயர்ந்த பொருட்களையும் வைத்துப் பாதுகாக்கலாம். உங்கள் வசதிக்கேற்ப ஒரு வங்கியைத் தேர்ந்தெடுத்து லாக்கர் வசதியைப் பெற்றுக்கொள்ளலாம். லாக்கர்கள் பல அளவுகளில் வாடகைக்குக் கிடைக்கிறது. நீங்கள் அளவுக்கு ஏற்றாற்போல் வாடகைக் கொடுக்க வேண்டும். சில வங்கிகள் லாக்கரின் வாடகையை உங்கள் சேமிப்புக்கணக்கில் இருந்து எடுத்துக் கொள்ளும். உங்களுக்கு அந்த வங்கியில் சேமிப்புக் கணக்கு இல்லையென்றால் நீங்கள் வாடகையின் அளவுக்கு வட்டி வருகின்ற அளவுக்கு, ஒரு தொகையை பிக்சட் டெப்பாசிட்டாகப் போட வேண்டியிருக்கும்.

**நானும் என் மனைவியும் வேலைக்குச் சென்று சம்பாதிக்கிறோம். எங்கள் மாத**



**உங்கள் கேள்விகளை 'மூலதன மந்திரம்' என்று குறிப்பிட்டு அனுப்பலா**
**KAFIN என்று டைப் செய்து, ஒரு ஸ்பேஸ் விட்டு, கேள்வி, பெயர், ஊ**

வருமானத்தில் எவ்வளவு சதவிகிதம் சேமிக்கலாம்? வழிகாட்டுங்கள்!

- மாதவன், கடலூர்

உங்கள் கேள்விக்குப் பதில் அளிக்க மற்ற பல விஷயங்கள் (உதாரணமாக ஊருக்கு ஊர் மாறுபடும் சில கட்டாயச் செலவுகள் - வாடகை, போக்குவரத்துச் செலவு என) தெரிய வேண்டும். அத்தியாவசிய தேவைகளைத் தவிர்த்து மீதியிருக்கும் அத்தனை பணத்தையும் சேமிக்கலாம். இன்றைய விலைவாசியில் மிகவும் கனகச்சிதமாகச் செலவு செய்து 50 - 65 சதவிகிதம் வரை சேமிக்கும் புண்ணியவான்களும் இருக்கின்றார்கள். இருவருக்கும் வருமானம் உள்ளபோது 50 சதவிகிதம் வரை



## டி. பாலசுந்தரம்



சேமிப்பது மிகச் சிறந்தது.

என் வீட்டில் வேலை செய்யும் வேலையாட்களுக்கு காப்பீடு செய்ய விருப்பம். அப்படி ஏதும் காப்பீடுகள் உள்ளனவா? நடைமுறைகள் என்ன?

- நாராயணமூர்த்தி, அடையார்

நீங்கள் எந்த மாதிரியான காப்பீடு (ஆயுள் அல்லது மெடிக்ளைம்/தனி நபர் விபத்து) எடுக்க நினைக்கிறீர்கள் எனச் சொல்லவில்லை. வீட்டில் வேலை பார்ப்பவர்களுக்கு என்று முதலாளியாக நீங்கள் பாலிசி எடுக்க முடியாது. பாலிசியை அவர்களையே எடுக்கச் சொல்லி, ப்ரிமியம் தொகையை நீங்கள் கொடுத்துவிடலாம். அதுதான் உங்கள் பிரச்னைக்குத் தீர்வு. உங்கள் வீட்டு வேலைக்காரர்களின் மீது இன்ஷூரபிள் இண்டரெஸ்ட் உங்களுக்குக் கிடையாது (இன்ஷூரபிள் இண்டரெஸ்ட் என்பது ஒருவரின் நஷ்டத்துக்கு இன்ஷூரன்ஸ் கம்பெனியிலிருந்து இழப்பீடு பெறும் தகுதி).

# மாதத்துக்கு எவ்வளவு சேமிக்கலாம்?

@kalkiweekly.comக்கும் அனுப்பலாம். செல்ஃபோனில் பெயருடன் 562632 என்ற எண்ணுக்கு எஸ்.எம்.எஸ்.செய்யலாம்.

யூத் எஃப்.எம்

# நினைவோ ஒரு பறவை!

என்னோட ஃப்ரண்ட்ஸ் என்னைக் 'காதல் நாதன்'னுதான் கூப்பிடுவாங்க. எப்பவும் நான் காதல் பாடல்களைத்தான் பாடிக்கிட்டு இருப்பேன். குரலைப் பத்திக் கவலைப்பட மாட்டேன். என் சந்தோஷம்தான் எனக்கு முக்கியம். காதல் பாடல்களைக் கேட்குறது அதிலும், இளையராஜா இசையின்னா எனக்கு ஜாங்கிரி சாப்பிடற மாதிரி. சூரியன் எஃப்.எம்.மில் இரவு பத்து மணிக்கு மேல இளையராஜா பாட்டெல்லாம் போடுவாங்க. அன்பான அருண் தொகுக்கும் இனிய இரவு நிகழ்ச்சி செம ஸ்வீட். அடடா... அந்த மனுஷன் குரலைத் தேனுல தடவி இருப்பார் போல. அவ்வளவு இனிமையா இருக்கும். நானும் ஒரு பாடலை விரும்பிக் கேட்டு, 'முத்தும் பாட்டு'ங்கிற பகுதியில பேசினேன். அதை ஒலிபரப்பினாங்க... அந்தப் பாட்டு, 'நினைவோ ஒரு பறவை / விரிக்கும் அதன் சிறகை / பறக்கும் / அது கலக்கும் / தன் உறவை...' இந்தப் பாட்டுக்கு எதுக்குங்க கோனார் உரை?

என் காதலியோட நினைப்பு பறவைப்போல மனசுக்குள்ள பறந்துக்கிட்டே இருக்கு. அந்த நினைப்பே போதும். அது என்னோட அவ இல்லாமலேயே உறவாடும். அந்தப் பாடலைக் கண்ணை மூடிக் கேட்டா கண்ணுக்குள்ள என் காதலி வந்து கண்ணடிக்கற மாதிரி தெரியும். அதெல்லாம் ஓர் அழகான சுகம்ங்க!

– ராமநாதன், மேலப்புதூர்

படம்: மாடல்

வாசகர்களே... 'யூத் எஃப்.எம்' பகுதிக்கு உங்கள் எஃப்.எம். அனுபவங்களை எழுதுங்க... kalki@kalkiweekly.com -க்கும் அனுப்பலாம்.

Registered with the Registrar of Newspaper of India under No.1041/57* Registered No.TN/CC (S) DN / 144 / 09 - 11* Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN / CC (S) DN / 70 / 09 /11* Registered as a Newspaper in Srilanka